# தேய்ந்த லாடம்



கோவை, அ. அய்யாமுத்து

# தேய்ந்த லாடம்

கோவை. அ. அய்யாமுத்து




முல்லைப் பதிப்பகம்
மயிலாப்பூர் :: சென்னை 4

## சமர்ப்பணம்

நான் எத்தனை போர்கள் தொடுத்தாலும், எவ்வளவு கடுமையாகத் தாக்கினாலும், என்னிடம் மாறாத அன்பும், வற்றாத வாஞ்சையும் கொண்டுள்ள

**இராஜாஜி**

அவர்களுக்கு இந்நூலை அன்புடன் சமர்ப்பணம் செய்கின்றேன்.

**கோவை. அ. அய்யாமுத்து**

# பதிப்புரை

நண்பர் கோவை அய்யாமுத்து தேசியவாதி, பத்திரிகாசிரியர், இலக்கிய கர்த்தா. எல்லாவற்றிற்கும் சிகரமாக அவர் கவிகளும் எழுதியிருக்கிறார்.

*     *     *

தேசிய உத்தாரணக் குறிக்கோளோடு வெளிவந்த 'குடிநூல்' அவருடைய பத்திரிகை. புகழ் படைத்த 'இன்பசாகரன்' என்ற நாடகம் அவருடைய சிருஷ்டி.

*     *     *

அய்யாமுத்துவின் கவிகள் அவ்வப்போது பல பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. 'தேய்ந்த லாடம்' அவருடைய சிறந்த கவிகளின் தொகுப்பு. கவியின் கருப்பொருளும், உருவமும் அவருக்கே உரிய தனிச் சிறப்புடையவை. புது யுகம் காண ஏங்கும் உள்ளத்துடிப்பை அவர் கவிகளில் நாம் காணமுடியும்.

இந்த நூலுக்கு அருமையான முகப்புச் சித்திரம் தீட்டியவர் ஓவிய நிபுணர் மாதவன் பிள்ளை. அவருக்கு நன்றி.

இந்த நூலை வெளியிடுவதில் எனக்குச் சிறிதும் சிரமமின்றிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட நண்பர் ப. ரா. அவர்களுக்கும் சம்பிரதாய முறையில் இங்கு நன்றி கூறி விடுகிறேன்.

—ப. முத்தையா

# உள்ளுறை


| | | பக்கம் |
| --- | --- | --- |
| தற்சிறப்புப் பாயிரம் | ... | 7 |
| தேய்ந்த லாடம் | ... | 10 |
| தப்பேதும் உண்டோ ? | ... | 17 |
| புது நெறி | ... | 26 |
| பணம் | ... | 29 |
| வீண் மொழி | ... | 30 |
| இரப்போர் இன்றேல்...? | ... | 37 |
| கறுப்பன் | ... | 43 |
| இயம்பாரோ யாரேனும் ? | ... | 56 |
| உத்தம நாடு | ... | 65 |



# 1

## தற்சிறப்புப் பாயிரம்

உலகினைப் படைத்த அலுப்பினால் உமாபதி
ஒருசேர்க் கஞ்சா ஊதிய வெறிபோல்
தலையது கனத்துத் தரையினில் நிகழும்
தகவலே எதுவும் தெரிகிறா ரில்லை.
உலகினில் மாந்தர் உறுதுயர் கேட்ட
உமையாள் நெஞ்சம் உருகியே கரைய,
அருகினில் இருக்கும் அன்புடைத் தேவர்
அலறி யடித்துக் கதறுதல் கேட்டும்,
'பம்-பம்! பம்-பம்! பம்-பம்!' எனவே
வெண்சங் கெடுத்தே வேந்திரன் ஊதும்
சங்கொலி கேட்டும், சங்கரன் மயக்கம்
இன்னும் தீர்ந்திலன் என்னத னாலே?
ஏற்றமும் தாழ்வும் ஈசனார் செயலோ?
ஈங்குநாம் உற்றிடும் இட(ர்)அவன் செயலோ?
போர்பல புவியில் புரிதலும் அவனோ?
பின்ன(ர்)ஏன் அவனைப் பேசவும் வேண்டும்?
அறன்வழி நிற்கவே அறிவும் தந்தான்;

மறவழி சென்றே மானிடர் சோர்வுறல்
இறைவன் செயலோ, இயம்பீர் உலகீர் ?
அகிலம் யாவும் ஆதியாம் ஈசன்
அன்புடன் நமக்கே அளித்தான் இன்புற :
அவன்செயல் அதுவே. அவனியில் காணும்
புன்செயல் எல்லாம் புரிபவர் மாந்தர் :
இறைவனை நோவதால் எப்பயன் விளையும்?
இறைவனை ஏத்திஞல் என்னதான் ஆகும்?
எல்லாம் தந்தான், இனியிலை தரவே !
இரந்தே வாடுதல் ஈசன் விதியோ ?
உடலும், உயிரும், உயர்நல் அறிவும்
திடமாய் உழைக்கத் தேவனும் தந்தான்.
'இரந்தே வாழ்தல் இறைவன் செயலெனில்,
பரந்து கெடஅப் பாவியும்!' எனவே
பாரோர் புகழும் பரமனுக் கினிய
வள்ளுவர் தாமும் வழுத்திஞர் பண்டே.
ஆகலின், உலகீர்! அனைத்திலுங் கொடிய
அடிமை, இரத்தல், அழியா வறுமை
தீருங் கருத்தைச் செப்பும்இப் பாக்கள் :
உத்தம நாட்டார் ஊழினை வென்றே
மெத்தச் சிறப்பாம் மேதகு வாழ்வும்,
மற்றும்இவ் வுலகில் வழங்கு வீண்மொழி,
நாடக மேடையில் நாட்பல தோன்றி
நாட்டவர் மகிழ நலமுடன் நடித்த
பேதைமைச் சிறுவன் பெற்றஓர் துயரமும்,
புதுமைப் பெண்ணின் புதுநெறி உரைகளும்,
கஞ்சிக்(கு) அலைந்த கறுப்பன் கதையும்,
தேய்ந்த லாடமும் திரைந்த கிழவியும்,

விதவைப் பெண்ணின் வேதனைச் செய்தியும்,
இரப்போர் இன்றேல் இங்கிலம் சுகமெனப்
பற்பல பெயரால் பார்ப்பீர் நீரே!
'எப்பொருள் எவர்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காணல் மேலாம் அறி'வெனும்
வள்ளுவர் மொழியின் வாய்மை அறிந்தோர்
தள்ளிடு வாரோ தவறெனை முற்றும்?
புலமை யிலாத புன்மைஇக் கவியென
படித்துத் தடித்த பண்டிதர் மொழிவார்;
பிறர்உழைப் பாலே பேசரும் இன்பம்
பெற்றுச் சுகிக்கும் பேதையர் கூட்டமும்,
தவத்தால் வருதல் தனமெனப் பகர்ந்தும்,
தனத்திலும் சிறந்த உழைப்பை மறந்தும்,
அவத்தை வளர்க்கும் அறிவிலி தானும்,
ஏற்றமும் தாழ்வும் இருத்தல் விதியெனும்
கூற்றிலும் கொடிய மாற்றலர் குழாமும்,
ஆணவம் கொண்ட ராணுவத் தோடே
கொடுங்கோ லோச்சும் கோழையும் விரும்பார்.
எனினும், என்னே? (இஃ(து)அவர்க்கு அன்றே!
பாருக்கு உழைத்துப் பசியால் மெலிந்து
பரமனை நோகும் பாமர மக்கள்
அவனியில் காணும் அவதிகள் எல்லாம்
யாருடை வினைவென அறிந்தால், உணர்ந்தால்,
அதுவே போதும்: அவர்க்கெனத் தானே
அறைந்தோம் இவற்றை; அஞ்சுதல் பின்ஏன்?

---

# 2

## தேய்ந்த லாடம்

தேய்ந்துகெட்ட லாடம்ஒன்று
தெருநடுவில் கிடந்ததுவே.
ஆய்ந்(து)அதனைப் பார்ப்பவர்கள்
அவ்வழியில் யாருமில்லை.
வாய்ந்த பயன்எதுவும்
வையகத்துக் கேஅதனால்
தீர்ந்துவிட்ட தால்அதனைச்
சீந்துவார் யாருமில்லை.
வண்டியுடன் ஓடுகின்ற
வால்வீச்சுக் காளைகளும்
கண்டபின்னும் காணாமல்
கண்மூடிச் சென்றனவே.
வீதியிலே சென்ற
விளையாட்டுப் பிள்ளைகளும்
காலால்அதைஉதைத்துக்
கர்வமுடன் சென்றார்கள்.
மோட்டார்கார்– ஓட்டிகளும்
முறைத்துமிகப் பார்த்(து)அதன்மேல்

காறிஉமிழ்ந் தேஅவரும்
காரோட்டிச் சென்ருர்கள்.
காதவழி எவ்வளவோ
காளையுடன் சென்றிருந்தும்,
காலில் குளம்பினுக்கே
கவசமாய்க் கட்டிநின்றும்,
காடுகளும் மேடுகளும்
கல்லடிக்க வேநடந்தும்,
தன்தேகம் தானழிந்தும்
தகைமையுடன் காளையினைச்
சேய்வளரத் தாய்வருந்தும்
செயல்போலக் காத்துநின்ற
அந்தஒரு லாடம்அந்தோ!
ஆதரவு யாதுமின்றிக்
கண்டோர் பழித்திடவே
கடைத்தெருவில் கிடந்ததுவே!

அங்காடிக் கூடையுடன்
அந்தவழி யோடுவந்த
கந்தன்மகள் மாரியம்மா
கண்பார்த்துப் போகையிலே,
கண்(டு)அந்த லாடமதைக்
கால்விரலால் மெட்டிநின்று
மெள்ளவே தானெடுக்கும்
வேளை, அவள்எதிரே
வந்தாள் ஒருகிழவி:
வயதெண்ப துவாளுள்,

மேனிமிக வே தளர்ந்து,
　　மினுமினுப்பெ லாம்மறைந்து,
கூனமுற்று, கொம்புகையில்
　　கொண்டவளாய் வந்துநின்றாள்.
காலால் வழிதெரிந்து,
　　கவலைச் சுமைதாங்கி,
வந்த பெருங்கிழவி
　　வாய்திறந்து கேட்கலுற்றாள் :
'ஏன்,தாயே, நின்றுவிட்டாய் ?
　　எவ்வூர் ? நீ யார் ?' எனவே.
'தேய்ந்த சிறுலாடம்
　　தெருவில் கிடந்ததம்மா !
காய்ந்தசட்டி யும்சுரண்டக்
　　கருத்தோ(டு) எடுத்தெனம்மா !
ஊர்எனக்கும் உங்களுக்கும்
　　ஒன்றே, அறியீரோ ?
மாரிஎன்பார் என்பெயரும்,
　　மறந்தீரோ தாங்கள்எனை ?'
என்றாள் இளையாள்.
　　எதிர்நின்ற பாட்டிசொல்வாள் :

'மறப்பேனோ மாரி,உன்னை ?
　　மதிகெட்டுப் போகவில்லை !
திறப்பாயே வாய்பறைபோல் ;
　　தென்னைமரம் தொத்துவையே !
கந்தன்மகள் நீயலவோ ?
　　கறுப்பனல்லோ உன்புருஷன் ?

சந்தைக்குச் சென்றாயோ
    சொக்குப்பொடி தான்வாங்க ?
இன்னும்அவ னைமயக்கி
    என்னசெயப் போறாயோ ?
குழந்தைகுட்டி நாலெடுத்தாய்,
    குறும்படங்க வில்லையோடி ?'
என்றுரைத்தாள் அக்கிழவி ;
    இளையாள் மிகநகைத்தாள்.
'சிரிப்பாய், அடி, சிறுக்கி !
    சிரிக்காயோ ? என்பிழைப்பு
நரிக்கே விருந்தளித்த
    நல்லாடு போன்றதடி !
விருப்பாக நீதேய்ந்த
    விலையில்லா லாடம்ஒன்றைச்
சட்டி சுரண்டுதற்குத்
    தானுதவும் என்றெடுத்தாய்.
விந்தையடி, விந்தைஇது !
    வீணான லாடமுந்தான்
எந்தவிதத் தாலும்இன்று
    சொந்தமுனக்(கு) ஆனதடி ;
உன்கை அகப்பட்டு
    ஒருவேலைக்(கு) ஆச்சுதடி ;
சந்தி சிரிக்காமல்
    தக்கஇடம் சேர்ந்ததடி !
என்நிலைமை காணடியே !
    எத்தனையோ நான்உழைத்தும்,
மக்கள்பல பெற்றெடுத்தும்,
    மாபெரிய பேரெடுத்தும்,

இட்டப் படியேநான்
இருக்கஇடம் ஒன்றில்லை!
வடித்தகஞ்சி கொஞ்சந்தான்
வார்ப்பவர்கள் யார்எனக்கு?
இடித்திடித்துப் பேசுதற்கோ
எண்ணரிய பேருண்டு!
எத்தொழிலும் செய்ய
எனக்கு வலுவில்லை!
ஆணுகப் பிறந்திருந்தால்,
ஆனபொருள் சேர்த்திருப்பேன்;
பெண்ணுக வேபிறந்து
பெருமையொன்றும் இல்லையடி!
படைத்தவனும் எங்(கு)ஒளிந்தோ
பரிகாசம் செய்கின்முன்!
கிடைத்தபயன் என்னஅடி,
கிழவியாய்ப் போனதன்றி?
மேனிமினுக் காயிருந்தால்
வேண்டிவெகு பேர்அழைப்பார்!
தேய்ந்தஒரு லாடத்தால்
வாய்ந்ததொரு வேலையுண்டு,
ஓய்ந்த கிழவியினுல்
ஒருபயனும் இல்லையடி!
கூனிஉடல் தானும்வற்றி,
குற்றுயிராய்ப் போனதாலே,
நாறும்உடல் தாங்கிநின்று
நாணுன கோலம்இன்று
காணுயோ, மாரி!என்னைக்
கண்ணெடுத்தே யார்பார்ப்பார்?

நன்றியுண்டோ இவ்வுலகில்?
நடுத்தெருவில் என்னைவிட்டார்!
"உழைத்தாளே இத்தனைநாள்
உருக்குலையு மட்டும்இவள்—
தழைத்ததுவே இவள்உழைப்பால்
தரையினிலே பெருங்குடும்பம்!"
என்றெண்ணிக் காப்பவர்கள்
இவ்வுலகில் யாரடியே!
ஆணிரண்டு, பெண்நான்காய்,
ஆறுமக்கள் பெற்றேனே!
அன்னார் தமக்குமணம்
ஆகும்வரை காத்தேனே!
பேத்தும் பிதிரும்
பெற்றவர்தாம் வாழுகின்றார்;
காத்திருந்தும் கண்ணெடுத்துக்
காணார்கள் என்னை இனி!
பண்ணையிலே சென்றுழைக்கப்
பலம்உடலில் இல்லையடி,
திண்ணையிலே சாய்ந்திருந்தால்,
திரும்பியெனைப் பாரார்கள்!
பெண்மக்கள் மனைநாடிப்
பிழைப்பதிலும் பெருமையில்லை;
கண்கெட்ட காலமதில்
கஞ்சிக்கே அலைகின்றேன்.
கட்டியஓர் மணவாளன்
கட்டையிலே சென்றபின்னர்,
சட்டியுடை பட்டதுபோல்
சாக்கடையில் வீழ்ந்துவிட்டேன்!

உற்ருர் உறவினர்கள்
　　ஊரெல்லாம் வேணவுண்டு,
சற்றேனும் அவர்நெஞ்சில்
　　தயையுண்டோ, சொல்லடியே ?
ஏமனெப்போ தான்வருவான்
　　என்கவலை தீர !' என,
நடைதளர்ந்து மனமுடைந்த
　　நரைதிரையாள் கூறிவிட்டுக்
கைக்கோல்ஒன்(று) ஆதரவாய்க்
　　கைப்பிடித்தே ஏகுவதை
மாரியவள் மனங்கசிந்தே
　　மறையும்வரை பார்த்துநின்ருள்.

விரித்தஉரை கேட்டதனுல்
　　வேதனைசூழ் நெஞ்சமுடன்,
கிடைத்தஒரு லாடமுடன்,
　　கிலேசமுடன் வீடுசென்ருள்.
மேல்திசையில் ஆதவனும்,
　　மேதினியார் செய்யும்இந்த
நேர்மையற்ற தீமுறையால்
　　நெஞ்சம் மிகக்கொதித்துச்
சீர்முகமும் செந்தணலாய்ச்
　　சென்றடைந்தான் வேகமுடன்.

---

# 3

## தப்பேதும் உண்டோ?

அப்பா ! நான் குடியிருத்தல்
ஆதனூர்ச் சேரியிலே ;
தப்படிக்கும் வேலைதலை
மாதாரியின் மைந்தன் ;
சுப்பன்எனும் பேருடையேன் ;
சூதுகளில் ஒன்றறியேன் ;
அப்பாவும் அம்மாவும்
ஆனநல் தெய்வமெனத்
தப்பாது போற்றித்
தவறுமலே நடப்பேன்.
சப்பாத்துக் கள்ளி
ஜனம்நடக்கும் பாதையிலே
எப்போது மேபடர்ந்தே
இடர்விளைத்து வந்ததனுல்,
எடுத்தெரிக்கும் எண்ணமுடன்
ஏகினேன் ஓர்மாலை.

கொடுங்கோல் கவைக்கோல்
கொண்டுசென்று கள்ளிதனை
ஒடுங்கப் பிடித்தே
ஒதுங்கிநின்று இழுக்கையிலே,
அந்தோ,நான் கண்டதென்ன !
அலறினேன் நெஞ்சமெலாம் !
ஆவி துடித்து என்றன்
அரைஉயிரும் போனதய்யா !
பச்சைப் பசுங்குழந்தைப்
பாலகனும் கண்ணெதிரே
பச்சைரத்தம் காயாமல்
படுத்திருந்தான் முள்நடுவே !
மல்லிகையின் மலர்பறித்து
மங்கையிலே வீசினாற்போல்
மெல்லியல் குழவியொன்றைக்
கள்ளிக்குள் விட்டனரே !
எண்ண முடியவில்லை,
எடுத்துரைக்கக் கூடவில்லை,
மண்ணதனில் அக்குழந்தை
மறைந்திருந்த காட்சிதன்னை !
மெல்லியதோர் சல்லாவால்
மெய்மூடிப் போர்த்திஅதைக்
கள்ளி எவளோ
கிடத்திவிட்டாள் பாதகமாய் !

மெள்ள எடுத்தேன்,
மடிமீது தானிருத்திக்

கள்ளியின் முள்ளையெல்லாம்
        களைந்தெறிந்தேன். அப்போது,
நல்லதோர் தென்றல்
        நாடிவந்து மோதிமிகச்
சில்லெனப் பட்டதினால்
        சிலிர்த்ததையா அச்சிசுவும்!
ஆனந்தம் கொண்டேன்,
        அணைத்துமுத்தங் கள்கொடுத்தேன்!
அன்னையிடம் சென்றோடி,
        ' ஆசைக் குழவிதனை,
அம்மாவே, நீபாராய்!
        ஆண்டவன(து) அற்புதமே!
சும்மா யிருக்கையிலே
        சுரைக்கொடியும் காய்த்ததுபோல்,
கள்ளி யெடுக்கையிலே
        கண்டேன் இப் பொற்குழவி—
கள்ளி எவளோ
        கடுஞ்சித்தந் தானுடையாள்,
வீசி எறிந்திருப்பாள்!
        நாசமாய்ப் போகஅவள்!
கூசுதம்மா கூறிடவும்,
        குழந்தை இதை நீ வளர்ப்பாய்!'
என்றவுடன், என்தாயும்
        எடுத்தாள் குழவிதனை;
கன்றுடைய தாய்ப்பசுப்போல்
        களிப்படைந்தாள் உள்ளமதில்;
மார்போடு அணைத்து
        மைந்தனுக்கு முத்தமிட்டாள்;

நார்போ லிருந்த
  நற்றனமும் பால்சுரக்க,
வியந்தாள் என்தாயும்!
  விம்முகின்ற மார்பதனை
நயமாகத் தன்கரத்தால்
  நாலுமுறை தேய்த்துவிட்டுக்
கள்ளிக் குழந்தைக்குக்
  கருணையுடன் பால்கொடுத்தே,
'எள்ளி நகையாட
  ஏன்பிறந்தாய் பாலகனே!'
என்றென்று இயம்பலுற்ருள்
  ஏதமிலா என்தாயும்:
நன்றே அவள்மொழியும்,
  நானிலத்தீர், கேளீரே!

'பள்ளுப் பறைச்சாதி
  பலசாதி நல்லோர்கள்
சொல்லுக்குத் தாம்அஞ்சிச்
  சுத்தமுட னேநடப்பார்,
ஒத்த வயதுதனில்
  உரிமைமணம் செய்வார்கள்,
பத்துப் பணத்துக்காய்ப்
  பாலகரை விற்கார்கள்!
அப்படி இல்லையப்பா,
  ஆதனூர்ப் பார்ப்பார்கள்!
தப்பிலிப் பார்ப்பார்
  தயையில்லா நெஞ்சினர்கள்:

அஞ்சு வயதுடைய
　　அறியாச் சிசுவதனை
வஞ்சக மாய்ப்பிடித்தே
　　வதுவைதனை முடித்திடுவார்!
கைப்பிடித்த மணவாளன்
　　கட்டையினில் ஏறிவிட்டால்,
பைங்கொடியாள் தன்னைப்
　　பாரில் விதவையென்று
மொட்டை யடித்து,
　　மூலையினில் தான்சேர்ப்பார்!
மட்டற்ற காதல்
　　வயதுவந்த பின்னர்அந்தக்
கன்னிதான் மனமுடைந்து
　　காலமெலாம் இருப்பாளோ?
அன்னைக்கும் தந்தைக்கும்
　　ஆசைநரைக் காததுவும்,
அண்ணனுடன் மன்னி
　　அனவரதம் கொஞ்சுவதும்,
அண்டை அகத்திலுள்ள
　　அம்பியுடைச் சேட்டைகளும்
கண்டுகண்டு காரிகையும்
　　காலத்தில் காமமுற்று
வண்ண அழகுடைய
　　　　வாலிபரைக் கூடிடுவாள்.

'பண்டைப் பெருவழக்கம்,
　　பாழ்வழக்கம் இப்படியே!



பிள்ளை பிறந்தாலோ,
கள்ளிதனிலேஎறிந்து,
சள்ளையுடன் தாயும்
சாவாள், வழக்கம் இதே!
என்(று)இதனை என் தாய்
இயம்பி முடிக்குமுன்னர்,
குன்று சரிந்து
குற்றுயிராய்ப் போனவள்போல்,
வந்துநின்றாள் ஓர் அணங்கு :
வயதுபதி னெட்டிருக்கும் ;
பந்திமுத்துப் பல்லுடையாள் ;
பவளஇதழ் தானுடையாள் ,
கார்மேகம் பெய்ததுபோல்
கண்ணீர் வடிக்கலுற்றாள் ;
பாரில்இறகில்லாப் பட்சியைப்போல்
வந்து நின்றாள் !
மௌனமாய்க் கையேந்தி
மைந்தனையும் தான்வாங்கி,
கவனமாய்க் கண்பார்த்துக்
கன்னத்தில் முத்தமிட்டாள் ;
விம்மி அழுத லுற்றாள்,
விலுவிலுத்துத் தான்துடித்தாள் ;
கம்மு குரலுடனே
கழறலுற்றாள் இம்மொழியும் :

தாயே, நீ கூறியதைத்
தனியிருந்து நான்கேட்டேன்—

வாயாரக் கூறியவை
வாய்மையினும் வாய்மை,அம்மா !
பேய்ச்சாதிப் பார்ப்பனரின்
பெருங்குடியில் நான்பிறந்தேன்,
நாய்ச்சாதி யார்என்னை
நாவிரண்டில் முண்டையென்று,
சுரிகுழலைப் பிடுங்கிச்
சுற்றினார் வெண்துகிலும் !
பருவமது வந்தபின்னர்ப்
பக்கத்து மாப்பிளையும்
மருவிடவே என்னை
மையலுக்குள் வீழ்த்திவிட்டான் !
கருவுற்றுக் காலமுறக்
கைக்குழந்தை நான் பெறலும்
வீட்டினில் உள்ளவர்கள்
விதவிதமாய் ஏசினரே !
" காட்டினிலே சென்று
கடும்புலிக்கு ஆளாவோம்,
நாட்டினிலே இன்று
நாம்வாழ நியாயமில்லை,
ஆட்டிவைக்கும் ஐயன்
அரனடியைப் போய்ச்சேர்வோம் !"
என்ற உறுதிகொண்டே
என்வீட்டை நான் துறந்தேன்.
மனத்தில் உறுதியின்றி,
மைந்தனை நான் கள்ளியதில்
போட்ட வுடன், பித்துத்
தலைக்கேறி ஓட்டமுற்றேன் !

நாட்டுக்கல் சென்றவுடன்,
நடுங்கின(து)என் உள்ளம்,அம்மா !

' ஆசையுற்றுக் காதலுற்றே
அடைந்தஒரு பாலகனை
நாசமுறச் செய்ய
நல்லமனம் தாளவில்லை ;
திரும்பிவந்து பார்க்கையிலே,
திடுக்கிட்டுப் போய்விட்டேன் !
விரும்பிவந்து பார்க்கையிலே,
மெய்சிலிர்த்துப் போனேன்நான் !
நின்று சிலநிமிடம்
நெஞ்சில் பலஎண்ணி,
" சென்று மடிவ(து)எங்கே !
சேர்ப்பார் புவியிலுண்டோ !
நந்தனார் சேரியிலே
நாம்சென்று வாழ்ந்திடுவோம் !
பந்தமிலாச் சேரிப்
பறையருடன் வாழ்ந்திடுவோம் !"
என்று மனம்தேறி
இவ்வழிநான் எய்தலுற்றேன் :
நன்றுநீ கூறியவை,
நான்ஒண்டிக் கேட்டுநின்றேன் !
என்குழந்தை உன்மடியில்
இருப்பதைநான் கண்ணுறவே,
அன்னை பராபரியின்
அருளெனவே போற்றிநின்றேன் !

இன்றுமுதல் நானும்
இங்கிருக்க நீதுணையே
அன்றிப் புகலிடமும்
ஆருலகில் வேறும்உண்டோ? '
என்றவ் வெழிலுடையாள்
இயம்பினுள் நெஞ்சுருக.

அன்றுதொட்டே அம்மடந்தை
அன்னையுட னேவசித்தாள்!
' நன்று, நன்று இஃ'தெனவே
நானும்ம கிழ்ந்திருக்க,
கருவண்டு போன்ற
கண்ணுடைய பாப்பாத்தி
அருவருப்பு யாதுமின்றி
ஆசையுடன் நேசமுற்ருள்!
எங்கள் இரு வருக்குள்
எப்படியோ மெய்க்காதல்
பொங்கி வழிந்ததையா
பொன்னூற்று நீரதைப் போல்!
இப்போதோ, நாங்கள்
இருவேமும் தம்பதிகள்!
தப்பேதும் உண்டோ,
சாற்றிடுவீர் மாந்தர்களே?

---

# 4

## புது நெறி

வையகத் துள்ளோர் வாழ்வினில் சுகமுற
என்மனத் துள்ளே எழுந்ததோர் புதுநெறி
இயம்பிடக் கேளாய், என்அருந் தோழியே !
ஈதலே சிறப்பென எம்முன் னோர்களும்
ஓதினர் : அதனால் உயர்ந்ததோ வையம் ?
இல்லார் என்போர் இருந்திட லன்றோ
ஈதலும் வேண்டும், இரத்தலும் வேண்டும் ?
ஈசன்இவ் வையகம் எல்லோர்க்கும் ஒன்றாய்
ஈந்தபின், யாரே ஈபவர் உள்ளார் ?
இரப்பவர் யாரே ? இரப்பதும் ஏனோ ?
தந்தையின் பொருளைத் தமயனும் கவர்ந்து, பின்
தம்பிக்குத் தானமாய்த் தருவதாய்ப் பகர்தலும்,
தகைமைசால் தோழியே, தருமமோ புகல்வாய் !

ஆதலால்,
தானம் செய்வதாய்க்
கூறும் ஈனனைத்
தேடிச் சென்(று)அவன்

தாடையில் ஓரடி
ஓங்கிக் கொடுத்தபின்,
‘ஆன உலகினில்
காணும் பொருளெலாம்
யார்க்கும் பொதுவென
ஈசன் ஈந்ததால்,
தானம் வழங்கிடும்
தகைமை ஏது?’ எனத்
தருமசீலனைத்
தாக்கு வாயடி!

உடலால் உழைக்கவும்,
உறுபசி ஆற்றவும்,
உன்னைப் போலவே
உரிமை எனக்குமே
இருக்கும் அளவில்நீ
இருப்பின், அப்புறம்
பிறர்க்கு வழங்கிடப்
பொருளும் உன்னிடம்
புகுந்தது எப்படி?
புகலு வாய்!’ என
அறைந்து, அவனையும்
திருந்தச் செய்திடாய்!

‘உலகம் இல்லையேல்,
உன்உடல் ஏது, சொல்?
உலகம் இல்லையேல்,
உன்அறி(வு) ஏது, சொல்?
உலகில் உனக்கென

உடைமை தனியதாய்க்
கொடுத்தது யாரடா ?
கூறு வாய்!' என
மடக்கி, அவனையும்
மனித னாக்கிடு.

ஆற்று நீரினைத்
தேக்கி வடித்துமே
பாய்ச்சிப் பயிர்களைப்
போற்றி வருகிறோம்.
உன்றன் உடலிலும்,
உன்றன் அறிவிலும்
உற்ற சக்தியை
உழைப்பில் நல்குவை!
உன்னைப் போலவே
உலகில் யாவரும்
செம்மை யாகவே
சிறந்து வாழ்ந்திட
எண்ணிடாய்!' என்றே
இயம்புக அவனிடம்!

இருக்க வீடுகள் யார்க்கும் சமமாய்
இருக்கச் செய்திடில் இன்னல் இராதடி!
பிறக்கும் பிள்ளைகள் சிறக்கக் கல்வியும்
பெற்று வளர்ந்திடில் பீடை இராதடி!
உடைமை பொதுவெனல் கடமை யாம்என
உலகம் அறிந்திட ஓது வாய்தினம்!
மடமையால் சிலர் மண்ணில் பொருள்களைத்
தம்மவை எனவே தழைத்தது வறுமை.
அருமைத் தோழியே, தருமம் ஈதென
அறிவில் ஈனனும் அறியச் செய்குவாய்!

# 5

---

## ப ண ம்

பணத்தைப் போற்றும் பாழ்மதி யாலே
குணத்தைக் குலத்தைக் கருதிப் பாரார்.
கோடி கோடியாய்ப் பணமுள ஒருவன்,
'வாடி, வா!' என யாரையும் அழைப்பான்.
பசுவைக் கொன்றிடும் பாதக னாயினும்,
பார்ப்பனப் பெண்ணின் பர்த்தா ஆகலாம்!
கன்னங் கரிய காக்கைபோ லாயினும்,
காசுடை யோனைக் 'கதிரவன்!' என்பர்.
அஞ்சும் அஞ்சும் யாதென அறியா
அறிவிலி யாயினும், பணமுள னாயின்,
அவன்வாய்ச் சொற்களே அறம்எனப் போற்றி,
'ஆ!ஆ! ஆ!ஆ!' எனவாய் பிளந்து,
பல்லைக் காட்டுவர் பலபேர் சென்றே.
'பாரில் உமைப்போல் பகர்வார் யாரே!
இல்லை உமைப்போல் உலகினில் யாரும்!
எல்லையில் அறிவு!' என்றுமே புகழ்வர்.
உண்மையில் தன்னை உயர்ந்தவன் என்றே
எண்ணி மகிழ்ந்து இறுமாப் புடனே
மடப்பணக் காரனும் வந்தவர்க்கு எல்லாம்
வாய்மை ஓதுவான் வள்ளுவன் போலே.
என்னே உலகம்! என்னே உலகம்!
இப்படிப் பணத்தால் இகழ்வுற் றதுவே!

---

# 6

## வீண் மொழி

பாராளும் மன்னனும் பண்புடை ராணியும்
மாரதம் ஏறியே ஊர்வலம் வருகையில்,
நார்முலை தொங்கி, நடைமெலிந்து அசைந்து,
பார்வையும் மங்கி, பசிபுகுந்து எரிக்க,
ஓர் இளம் மங்கை உற்றனள் தேர்முன் ;
திடுக்கென வீழ்ந்து துடித்தனள் நொடியில்,
வெடுக்கெனச் சீவனை விட்டனள், ஐயகோ!

கண்டனள் ராணியும் : 'கனவோ ?' என்றனள் :
கண்களும் கலங்கிக் கணவனை நோக்கி,
மண்ணினுக்கு அதிப ! மாசில்அக் கோதை
உண்ணவே உணவும், உடுத்தநல் ஆடையும்
இன்றி நம்முனர் இங்ஙனம் மாய்ந்திடல்
நன்றிதோ ? நன்றிதோ ? நவிலுவீர் ! என்மதி
சுழலுதே ! நெஞ்சமும் சோர்வினால் அயருதே !
சொல்லுவீர் ! சொல்லுவீர் ! சோகமும் மீறுதே !
இப்புவி வரண்டதோ, இங்ஙனம் மாய்ந்திட ?
ஈசனார் படைப்பினில் இருளது மூண்டதோ ?

கூசுதே, ஐயனே! கோலதும் சாய்ந்ததோ?
ஏசுமே உலகெலாம்! என்னை நும் ஆட்சியே?
வானமே இடிந்ததோ? வான்மதி பெயர்ந்ததோ?
ஈனமாம் இச்செயல்! இனிஇதைச் சகித்திடல்
ஏதமாம், இறைவனே! இதற்(கு)ஒரு வழியினை
நீதமாய்க் கண்டிடல் நின்கடன்!' என்றனள்.

'நன்றுநீ மொழிந்தனை, நாயகி! இச்செயல்
நன்றல ஆயினும், நாம்என் செய்வதே?
அன்றவன் எழுதினன், அழிப்பவர் யாவரே?
மன்னராய்த் திகழ்தலும், வறிஞராய் நோதலும்,
விதிப்படி நிகழ்வதாம்! விதியினை மாற்றிட
மதியிலை, மங்கையே! மனத்துயர் விடு, விடு!
நன்மையே செய்பவர் நலமுடைச் சுகம்பெறல்,
புன்மையே புரிபவர் புவியினில் இடர்பெறல்
திண்மையாம்! தெளிந்திடு, தெரிவையே!
[துயர்விடு!

எண்ணிலா ஏழையர் எங்குமே இருத்தலால்,
நம்மை யார் ஏசிட? நாயகி!' என்றனன்,
இம்மையும் மறுமையும் இயல்பெனும் மன்னவன்.

* * *

செத்த பிணத்தினைச் செத்திடும் பிணங்களும்
மெத்தத் துரிதமாய் மேவியே கடத்திடத்
தேரும் சென்றது; தேவியும் திகைப்புறத்
தேவனைத் துதித்தவள் செப்புவள் மீண்டுமே:

* * *

'வீதியில் தேரிதோ விதிப்படி போதலாம்;
விதிமதித் துணையினல் விண்ணிலும் சாடலாம்!

கூறுவீர் ! குழிதனில் வீழ்தலோர் விதியோ ?
குன்றுமீ(து) ஏறியே கவிழ்தலோர் விதியோ ?
கூரைமீ(து) ஏற்றிடும் குறும்புமோர் விதியோ ?
குற்றமாய் நடந்துபின், குற்றமாம் விதிஎனல் !

' உழைப்பதே செல்வம், உழைப்பதே விதியாம் !
உழைப்பதே நியமம், உதவியாம் பிழைக்க
உடல்வலி கொண்டும், உறுமதிக்கு இசையவும்,
கடல்அலை போலே காலமும் உழைத்தால்,
உறுபசி யாலே உயிர்விடல் நேரா,
சிறுநெறி பரவா, சீர்மலிந்து ஓங்கும் !

' உடலும் மதியும் உழைக்கவே கொடுத்தான்.
திடமுடன் மக்கள் சேர்ந்தே உழைத்திடில்,
சேருமோ துயரம் ? செப்புவீர் மன்னவ !
மண்ணில் உழைத்தால் மாபொருள் விளையும் ;
நுண்ணிய அறிவால் நுகரலாம் இன்பம்.
உண்ணவும், உடுக்கவும், உளமகிழ்வு எய்தவும்,
எண்ணிலாப் பொருளை ஈசனும் விதித்தான்.

பலபேர் உழைத்திடச் சிலபேர் சுகித்தலும்,
சிலபேர் சுகித்திடப் பலபேர் இரத்தலும்,
சோம்பி யிருத்தலே"ஷோக்"கெனக் கொள்ளலும்,
தேம்பாது உழைக்கும் தீரரை எள்ளலும்,
பாரினில் விதிதனைப் பழித்தது போலாம் !
ஈசனும் தந்தான் இங்குள யாவும் ;
நேசமாய் உழைத்தே நீள்பசி ஆற்றிடக்
காகமும் கூடிக் கரைந்தே உண்ணப்
பாகம்ஏன், மன்னவ, ஏகமாம் உலகில் ?

'மக்களில் சிலபேர், மடமைசேர் மிடியால்,
கல்லாது ஒழிந்தே கவலைமிக் குற்றே,
வயிற்றுப் பசியால் வாடிடல் கண்டபின்,
பயிற்றி அவர்களும் பயன்பெறச் செய்தல்,
மதியினில் சிறந்த மன்ன,நின் கடமை!
விதியெனச் சிலரை விலக்கலும் படுமோ?

'கஞ்சிக்கின்றியே கதியற்று அழிதலும்,
நெஞ்சினில் துயரொடு நீசராய்த் திரிதலும்,
அஞ்சி அஞ்சியே அனல்படு புழுப்போல்
வஞ்சனை பலவால் வாடித் துடித்தலும்,
தஞ்சம்இலாமலே தாழ்வுற்று இறத்தலும்,
வெஞ்செயல்அல்லால், விதியெனத் தகுமோ?

'விதிதான் யாதென விளப்புவீர், மன்னவ!
விதியெனப் படுவது மாசிலா நியமம்;
நிர்மலன் ஈசன் நியமிப்பே விதியாம்!
மதியினைத் தந்தான், மண்ணையும் தந்தான்,
மாகட லோடே, மதி, கதிரோன்சேர்
விண்ணையும் நன்றே விதித்தனன் விமலன்!
யாவையும் நமக்கே நேயமாய் விதித்தான்!
உடலினைத் தந்தான், உயிரையும் தந்தான்!
திடம்பெற உழைத்துத் திகழ்தலே விதியாம்!

'விதையும் வெடித்து, முளையும் முளைத்து,
இலையும் அடர்ந்து, குலையும் மலர்ந்து,
பிஞ்சும் முதிர்ந்தே, பெட்புடன் நமக்கே
"அஞ்சேல்!" எனக்கனி அளிப்பதே விதியாம்!
இரவும் பகலும் இன்னுயிர்க்கு ஆற்றும்

பரவுநல் ஒளியும், பாங்குடை வெப்பமும்,
பசும்புல் தரையும், பாய்ந்திடு நதியும்,
விசும்பும், விண்ணினில் மின்னிடும் மீன்களும்,
கொம்மைசேர் கொங்கை குலுங்கிடும் அணங்கும்,
செம்மையாய்ச் சகத்தினில் சேர்ந்ததும் விதியால்!

‘உழையாது இருத்தல் உலகினில் விதியல;
உழைத்தே உண்ணல் உண்மைசேர் விதியாம்!
மலரில் கமழும் மணமே விதியாம்;
மலர்என் றாலே, மணமுடைத் தாகும்.
மதிஎன் றாலே, விதியின் விளைவாம்.
விதித்தவன் ஈசன், விதிமதி ஒன்றும்.
மணமகள் என்றே மதியினைச் சொலலும்,
மணமகன் எனமா விதியினைச் சொலலும்,
சரியெனப் படுமே! சகத்தினில் இரண்டும்
சரிநிகர் சமமாய்த் தழைத்திடும் ஒன்றாய்!

‘பசியால் ஒருவன் பாரினில் மடிந்தால்,
பசையிலா மனிதர் பகருவார் விதிஎன.
பசியால் இறக்கவா பாரினை ஈசன்
பற்பல பொருளுடன் படைத்தே விட்டான்?
ஈசனார் விதித்தது இயல்நூறு ஆண்டாம்;
இடையினில் சாதல் மடமையால் ஆகும்.
நேசமாய் யாவரும் நேமமாய் உழைத்தால்,
பேசிடும் வறுமையும், “தோஷமாம் விதியும்,”
ஏசலும், ஏங்கலும், இரத்தலும், எளிமையும்
இல்லாது ஒழியும்! எல்லாம் இன்பமாம்!
சிறத்தல் மதியால், சிறப்புடை விதியால்;

பிதற்றுதல் ஏனோ பெட்புடை விதியை?'
என்றனள் ராணியும்; ஏற்பென மன்னனும்,

சென்(று)உடன் வேகமாய்ச் சேர்ந்தனன் அவையில்...
அமைச்சரை விளித்தே அறைந்தனன் இங்ஙனம்:
கண்டனம் ஏழையின் கதியினை இன்றுநாம்!
கலங்கினள் தேவியும், கண்ணீர் சொரிந்தாள்!
இன்றுடன் எளிமையை எமனுலகு ஓட்டுவோம்!
நன்றல வறுமை! நாடுவீர் ஊரெலாம்!
கன்றினைப் பசுவும் கரைந்து அமுதூட்டும்
தன்மைய தாகவே தயவுடன் மக்களைத்
தேடியே அழைத்துத் திருவுடன் வாழ்ந்திடக்
கூடிய வழிதனில் குணமுடன் அமைப்பீர்!
இல்லறத் தோடே நல்லறம் ஓங்கி,
இருக்க வீடும் இதந்தரு கல்வியும்
உருக்கமாய் அவர்க்கெலாம் உவந்தே அளிப்பீர்!
உழுதூண் சுவைக்க உரிமையாய் அவர்க்கெலாம்
பழுதிலா நிலத்தினைப் பண்புடன் பகிர்ந்தும்,
பொக்கிஷம் திறந்து பொருள்தனை வாரியும்
அக்கரை யோடுநீர் அளிப்பீர் அளவதாய்!'
என்றனன் மன்னனும், ஏகினர் அமைச்சரும்.

கரிய பெருவானில் காரிருள் கூட்டம்
பரிதி ஒளிகாணப் பறந்திடல் போல,
அரியகோ உரைப்படி அமைச்சரும் முயல,
எரிமலை போன்றதோர் ஏழைமைத் துயரும்
மறைந்ததே அன்றுடன்! மன்னன்ஊர் வலத்தின்முன்
விழுந்த பேழையை விமரிசை யாகவே
அரண்மனை வாயிலில் அடக்கமும் செய்தனர்.

அரம்பைபோல் ஓர்சிலை அதன்மேல் உயர்த்தி,
எழுதினர் அடியினில் இங்ஙனம் பொன்னிறால் :

விதித்தனன் ஈசன் விண்ணையும் மண்ணையும் ;
மதித்துஇதை, உழைத்தே மகிழுவீர், மக்காள் !
இப்புவி எவர்க்கும் என்றுமே பொதுவாம் !
தப்பிலாது உழைத்துத் தகைமையாய் வாழ்வீர் !
பசியால் ஒருவன்இப் பாரில் இறந்திடில்,
புசியீர் நீரும் ! புசித்திடில் பாவம் !
விதியெனச் சும்மா வீண்மொழி விளம்பேல் !
விதியினை உணர்ந்து, விதிப்படி வாழ்வீர் !'

# 7

## இரப்போர் இன்றேல்...?

தருமரைச் சூதால் ஜயித்துஅவர் நகரைத்
துரியோ தனனூர் பறித்தத னாலே
குருக்ஷேத் திரத்தில் இருதிறத் தாரும்
பொருதிய பாரதப் போரத னாலும்,
கருணை யிலான்எனக் கஞ்சனைக் கண்ணன்
குருதி வழிந்திடக் கொன்றத னாலும்,
சூர்ப்ப ணகையின் துயரது கண்டே
ஆர்ப்பரித்து எழுந்த இராவணன் தன்னை,
வாலியைக் கொன்று, வானரப் படையுடன்
கானகம் கடந்து, கடலினைத் தாண்டி,
ஆரிய இராமன் அழித்தத னாலும்,
விபீஷணன் பின்னர் வேந்தனாய் வாழ்ந்து
மாலின் பெயரை விளக்கிய தாலும்,
குன்றின்மேல் நின்ற குமரக் கடவுளும்
நன்றெனச் சூரரை நறுக்கிய தாலும்,
ஆண்டவன் மகனும் அன்புடை ஏசுவும்
சிலுவையில் ஏறியே செத்தத னாலும்,

தேவனின் தூதனும் திருமிகு நபியும்
ஆண்டவன் நீதியை அறைந்தத னாலும்,
போதி மரத்தின் நீழலில் இருந்து
புத்த பிரான்அருள் பெற்றத னாலும்,
நெட்டைத் துருக்கர் ஒட்டகம் ஏறிச்
சிந்துவைக் கடந்து இந்தியா புகுந்தே
இஸ்லாம் மதத்தை இங்கெலாம் முழக்கிப்

'பிஸ்மில் லா!' எனப் பரப்பிய தாலும்,
சங்கரர் போன்ற சமயா சாரியர்
சாத்திரம் விளக்கிய சூத்திரத் தாலும்,
வர்த்தகம் புரிய வந்தஐ ரோப்பியர்
வஞ்சகம் பலவால் வாழ்வதி னாலும்,
'அன்பும் அஹிம்சையும் அறம்!'எனக் காந்தி
அனைவரும் கைக்கொள அறைந்தத னாலும்,
வறுமையின் கொடுமையும், வாழ்வினைச் சிதைக்கும்
மடமையும், சிறுமையும், மானமில் நிலைமையும்
மாறிட வில்லையே! மறையுமோ இவற்றால்?

மண்டலம் எங்கும் மற்றொரு பெரும்போர்
எப்பவும் காணா அற்புத மாகவே
எப்படிச் சூதாய் எழுந்தது காணீர்!
யார்நலம் கருதிஇப் போர்பிறந் ததுவோ,
பார்சுடு காடாய்ப் பாழா கிடவே?
நவிலவும் படுமோ நாவினால் இந்தப்
புவிதனில் நடைபெறு போர்தரும் அவதி!
பற்பல ஊர்களில் பட்டினி யாலே
பரிதவித் திருந்த பாமரர் பலரையும்
ஹிட்லர் எனும்பயல் ஏவினன் போரில்.

துட்டன்இவ் வொருவன் துடுக்கினை அடக்க
மற்றவர் எல்லாம் மாபடை திரட்டி,
கற்றநூல் அறிஞர் கட்டிய பொறிகளால்
ஆற்றிய போரால், கூற்றுவன் தானும்
அலறித் துடித்தே அஞ்சினின் றனே!
வானில் செம்மழை வழிந்தது போலப்
பாரில் பரவியே பாய்ந்தது செந்நீர்!
சண்ட மாருதத் தால்பல மரங்கள்
கண்ட துண்டமாய்க் காய்வது போலவே
மண்டல மனிதர் மடிந்துவீழ்ந் தனரே!
குன்றுகள் போலக் குவிந்தன பிணங்கள்!
கணவரை இழந்து கலங்கினர் ஓலமும்,
கால்கை முறிந்த காளையர் ஓலமும்,
தனையரை இழந்த தாய்களின் ஓலமும்,
தந்தைகள் இழந்த மைந்தரின் ஓலமும்,
வீடுடன் பொருளும், நாடுடன் நலமும்,
யாவும் இழந்து 'ஓ'வென அலறி
ஓடித் திரியும் ஊரார் ஓலமும்,
ஓங்கியே பொங்கும் ஊழிக் கடலினும்
உயர்வாய் ஒலிக்குதே, உணர்வும் குன்றிட!
அயர்வ(து)இது எப்பவோ அறிகிலம் நாமும்!

முன்புஓர் யுத்தமும் மூண்டது இதுபோல்;
முடிந்த பின்னரும் தொலைந்ததோ வறுமை?
இன்றையப் போரும் 'இனிதாய்' முடிந்ததே!
வென்றியால் ஏழையின் வாட்டமும் தீருமோ?
கையினை நீட்டியும், பற்களைக் காட்டியும்,
காசுக் காகவே கற்பினை விற்றும்,

வாழ்ந்திடு மக்களின் தாழ்வதும் அகன்று,
பாழ்தரு பிணியுடன், பசியும் விலகி,
அறியா மையெனும் ஆரிருள் அகன்று,
கடவுள் படைத்த காசினி யுள்ளோர்
கஞ்சிக்கு இன்றிக் கவலைப் படுதலும்,
அஞ்சி அஞ்சி அலைந்து சாதலும்
இல்லாது, என்றும் இன்பம் பெருகவும்,
சிறந்த நிலையில் திகழ்ந்து விளங்கவும்,
உறுதி அளிக்கல் உறுவோர் யாவரே?
புத்தம் புதியவாம் கலைகள் பெருகியும்,
நித்தம் உலகினில் நிதிகள் குவிந்தும்,
மெத்தப் பூமியில் விளைச்சல் மலிந்தும்,
மேன்மைத் தொழில்கள் விருத்தி யாகியும்,
சித்தம் கலக்கிடும் சிறுமையும் துயர்களும்
தீராது இருத்தலை யாரே பொறுப்பர்?
போருக்கு இழைத்த இத்தனை பொருளும்,
போருக்கு உழைத்த இத்தனை திறனும்,
போருக்கு இரைத்த இத்தனை உயிரும்,
போரில் பொறுத்த இத்தனை துயரும்
பாரில் பசியினைப் போக்கிட உதவிடில்,
போரில் சேர்ந்திடப் போவார் யாவரே?
சிலரே தனத்தினில் செழித்துக் கொழித்தலும்,
பலர்ஏ ழைகளாய்ப் பாரில் தவித்தலும்
சரியே என்றிடும் சட்டமும் தகுமோ?

விதியினை நொந்தே விண்ணினை நோக்கிக்
கதியெனக் கடவுளைக் கருதியே கதறலும்,
சோதிடம் பார்த்தலும், துயரினைப் போக்க
வேதியர் கூறிடும் விதிஅனு சரித்தலும்,

பணம்உடை யார்களின் பரிவினை வேண்டலும்,
குணம்உடை யார்களின் கருணையைத் தூண்டலும்,
காசி-ரா மேசுரம் கண்டிட ஓடலும்,
காசுக் காகவே கணிகைபோல் ஆடலும்,
போதும் போதுமே! புகல்வது கேளீர்!
புதியதோர் வழியினைப் புகல்வேன், கேளீர்!

தேசமே பெரிதெனச் செப்புவ தாலும்,
திராவிடம் தமிழ்எனும் கூச்சலி னாலும்,
பாகிஸ் தான்எனப் பகர்வதி னாலும்,
பாரினில வறுமை, பகர்வொணு அடிமையும்
மாறிடா என்பதை மனத்திலே கொள்வீர்.
கூறிடும் வழிதனைக் குறிப்புடன் கேளீர்!
ஏழையர் ஏழையாய் என்றுமே இருத்தலும்,
ஏய்த்துப் பணம்சிலர் சேர்த்துச் சுகித்தலும்
ஏற்றதே யாம்எனப் போற்றிடும் நெறிதனை
மாற்றியே அமைத்திட, மாநிலத்து ஏழைகாள்!
கூரைமீது ஏறியே கூவி அறைமினோ!
கூடிநீர் ஒன்ருய்க் கூவி அறைமினோ!

ஒருசிலர்க் காகவா உலகமும் படைப்பும்?
உழுவோர்க்கு இலாமலே ஊரினில் சிலபேர்
தம(து)என நிலத்தைச் சாற்றியே, 'குத்தகை
தா!'எனக் கொள்ளலும் தவறெனச் செப்புவீர்.
காற்றும், மழையும், கதிரவன் ஒளியும்,
ஆற்றிலே ஓடிடும் அரும்புனல் போலவும்,
பூமியும் போகமும் பொதுவே யாம்எனச்

சாமியின் முன்னரே சாற்றுவீர், நண்பரே!
ஈதலும் இரத்தலும் ஈனமாம் தொழிலென

ஓதுவீர் உலகினில் ஒற்றுமை யாகவே !
எல்லாப் பிள்ளையும் எழுத்தொடு கணக்கும்,
எல்லா மக்களும் ஏற்றமாம் தொழிலும்
பொல்லாப்பு இலாது புரிந்துமே வாழ்ந்திடில்,
இல்லா ஏழையர் எனும்மொழி மறைந்து,
இல்லறத்து இருந்தே இன்புற வாழ்வினில்
நல்லறம் திகழும் நாடெலாம் செழிப்புற.

தனித்தனி மனிதரே தனிப்பெருந் தொழிலைத்
தமதாய் அமைத்தே தனிப்பொருள் சேர்த்திட
இனிமேல் தரையினில் இசைந்திட வேண்டா !
'தனிமுத லாளியே தரும விரோதியாம் !
உறுதொழில் யாவும் ஊரினில் பொதுவாம் !
சிறப்புடை யோனும் ஜனஊ ழியனே !'
எனும்மறை புதியதாய் இயற்றுவீர் நீரே !
இரப்போர் இன்றேல், இந்நிலம் சுகமே !

# 8

---

## கறுப்பன்

பெற்றவள்யார் எனஅறியேன்,
பிறந்ததற்கே காரணமாய்
உற்றதந்தை யார்எனவும்
உண்மையிலே யான்அறியேன் :
நற்றவத்தார் பெற்றிடுவார்
நாலடுக்கு மாளிகையில்,
எத்தவத்தால் பெற்றனளோ
எந்தன்அன்னை, யார்அறிவார் ?

தேரோடும் வீதியெலாம்
திரிந்திடுவேன் எச்சிலுக்காய்,
நாயோடும் போட்டியிட்டு
நடுத்தெருவே நக்கிடுவேன்,
யாரேனும் உத்தமர்கள்
ஒருகாசு தருவாரேல்,
யாதேனும் வாங்கிஒரு
வாய்கடிப்பேன் மகிழ்வாக.

தெருவெல்லாம் என்வாசல்,
 தேர்நிலையே என்வீடாம்,
தெருப்புழுதி யுடன்மேனி
 திருமேனி யாய்த்துலங்கும்.
விருப்புடனே எனைஅழைத்தே
 விளம்பிடுவார் யாரும்இரார்,
வெறுப்புடனே ஏசுதற்கோ
 வேணளவு பேர்களுண்டே!

மந்தையெலாம் நான்திரிவேன்,
 மரங்களெலாம் ஏறிடுவேன்,
கந்தைஒரு கோவணமே
 கட்டுதற்குப் பட்டாடை!
விந்தையுட னேமகிழ்ந்தே
 வேதனைகள் யாவையெனச்
சிந்தைதனில் கொள்ளாதே
 சிவகிரியில் வாழ்ந்திருந்தேன்.

என்வாழ்வில் இவ்வாறாய்
 எட்டாண்டு சென்றிருக்கும்...
என்மீதில் இவ்வயதில்
 ஈசனுமே கண்திறந்தான்!
அன்றாடம் அலைவதுபோல்
 அன்றொருநாள் சந்தையிலே
ஒன்றாகக் குப்பைகளை
 ஒருமித்தே சேர்க்கையிலே,

துள்ளிற்(று)ஓர் மோதிரமும்!
 தூக்கியதைக் கைதனிலே,

கள்வெறியால் களிப்பதுபோல்
கால்நடனம் ஆடிடவே
சென்றிட்டேன் ; செட்டிகடை
சேர்த்திட்டே மோதிரத்தை,
'என்றனுக்குத் தந்திடுவீர்,
இதன்கிரயம் !' என்றேனே.

கணையாழி தனைவாங்கிக்
கடைக்காரச் செட்டியுமே,
கண்சாடை யாய்அதனைக்
கணநேரம் கண்டிருந்து,
கணிசமதாய்க் காண்பதற்கே
கைதனிலே வைத்(து)ஆட்டி,
கனைஎறிவான் போலஎனைக்
கடைக்கண்ணுல் கண்டு,பின்னர்,

'நாய்மகனே ! நீயும்இந்த
நகைஎங்கே களவாண்டாய் ?
நவில்உண்மை ! இல்லையெனில்,
மடிவாய்என் கண்எதிரே !
யார்முதலை எங்கெடுத்தாய் ?
கூறுய்நீ !' என்றுவெறி
நாய்போலப் பாய்ந்தானே !
நான்அவனைச் சாந்தமதாய்,

'நிந்தனைகள் கூறுதீர் !
நீசனல்ல நான்திருட !
சந்தையினில் குப்பையிலே
தற்செயலாய்க் கண்டதய்யா !

சிந்தனைகள் பலவிதமாய்ச்
செய்தும்என்மேல் சீறுமல்,
தந்திடுவீர் என்முதலைத்
தயவுடனே !' என்று சொன்னேன்.

எந்தவித மாய்உரைத்தும்,
இரக்கமின்றி, அக்கொடியோன்
சொந்தமுள்ள வன்போலே
சூதாகக் கூச்சலிட்டான் !
அக்கம்பக்கம் உள்ளவர்கள்
அதுகேட்டுக் கூடிநின்றே,
' கக்கிடடா, உள்ளதெல்லாம் !
கவர்ந்த(து)எங்கு, சொல்லிடடா ?

' பிச்சைதின்னும் நாய்உனக்குப்
பச்சைக்கல்லு மோதிரமோ ?
எச்சில்உண்ணும் நாய்உனக்கே
எங்கிருந்து வந்ததடா ?
பல்லை உடைத்திடுவோம்,
பதம்பார்ப்போம் உன்தோலை !
நல்ல தனத்துடனே
நவிலாயோ உண்மைதனை ? '

என்றே பலவிதமாய்
எரிந்தவரும் பேசலுற்றார்.
என்றனுக்கோ இங்கிலையில்
என்னபதில் சொல்வதென,
ஒன்றும் புரியாமல்,
' ஓ 'வெனவே கத்தலுற்றேன்.

அந்நாள் வரையிலும்நான்
அழுதறியேன் இவ்விதமாய்.

கஞ்சிக்கே தாளமிட்டும்,
கடைத்தெருவில் எச்சில்பெற்றும்,
கட்டத் துணியுமற்றுக்
களைப்பாறத் திண்ணையற்றும்,
'அம்மா!' என்றே அழைக்க
அவனியில்ஓர் அன்னையற்றும்,
திக்கற்றே இருந்தாலும்
தெம்பாகவே இருந்தேன்.

கந்தன் அருளாலே
அந்தநல்ல வேளையிலே,
அந்தகனுக்கு ஆதவனும்
கண்திறந்தாற் போலவேதான்
வந்தார் ஓர்அதிகாரி;
வழிவிட்டார் அங்கிருந்தோர்;
தந்தான் கடைக்காரன்
தடபுடலாய் மோதிரத்தை!

'என்னப்பா, விஷயம்?' என
இருந்தோரைக் கேட்டறிந்தே,
சொன்னஅந்த மோதிரமும்
சொந்தமது, தம்ம(து)என்றே,
என்றன் முகம்நோக்கி,
இனியகுரல் தானெடுத்து,
'ஏதுனக்கு வேண்டுமடா,
இயம்பாய்!' எனக்கேட்டார்.

‘ சத்தியமாய்ச் சொல்லுகிறேன்,
சந்தையினில் கிடந்ததையா!
இத்தரமாய் இவர்களனை
இழிவாகப் பேசுவதும்
எவ்விதத்தில் நியாயம்என
என்றனுக்குத் தோன்றவில்லை!
ஏழைக்கே ஒருபொருளும்
ஈசன்தரல் ஆகாதோ?’

என்றேன். அதிகாரி
என்கரத்தைப் பற்றிநின்று,
‘ உன்றன்பேர் என்ன, அடா?
ஊரும்எது? சொல்லு(க!)’என்றார்.
‘ ஊரறியேன்! பேரறியேன்!
உற்றார்கள் நான்அறியேன்!
கறுப்பாய்நான் இருப்பதினால்
கறுப்பனென்று சொல்லிஎனை

அழைப்பார்கள்!’ என்றதுவும்,
அதிகாரி சிரித்தவராய்,
குழைவாய்என் முகம்நோக்கிக்
குளிர்ந்ததொரு பார்வையுடன்,
பையதனில் கைபோட்டுப்
பத்துரூபா யெடுத்(து)என்றன்
கையினிலே தான்கொடுத்துக்
கடந்தார் வழிதனிலே.

சுக்காகச் செட்டிமுகம்
சுருங்கிவிட்ட(து) அப்போது.

பக்கத்தே யிருந்தவரும்
பதில்வார்த்தை பேசவில்லை.
வெள்ளிப்பணம் தொட்டதனால்
வியர்த்ததுஎன்றன் தேகமெலாம்.
வேகமாய்ச் சென்றோடி
நின்றேன்அதி காரிமுன்னே :

'பஞ்சைஎனக்(கு) எதற்காகப்
பத்துரூபாய் தந்தீர்,ஐயா?
நெஞ்சில்பய மாகுது,ஐயா,
நிஜமாகச் சொல்லுகிறேன் !
அந்திக்(கு)எங்கு வைப்பேன் ?இதை
யாரிடம் கொடுத்துவைப்பேன் ?
இந்தஉல கந்தனிலே
எனக்குஅன்பர் யாருமில்லை !

'பெட்டி யில்லை, பேழையில்லை,
படுத்துறங்க ஜாகையில்லை !
மட்டிப் பசங்கள்என்னை
மாட்டினதைக் கேட்டபின்னர்,
பணத்தோடே இத்தெருவில்
படுத்தால் அவர்கள்என்னைப்
பிணத்தோடு சேர்த்திடுவார்,
பேசுதற்கும் கூசுதய்யா !

'செம்புக்காசு ஒன்றிருந்தால்,
சிவலோகம் கண்டிடுவேன் !
வம்புக்கே வித்தாகும்
வெள்ளிப்பணம் வேண்டாமய்யா !'

என்றுசொலக் கேட்டவரும்,
இடிபோல் நகைக்கலுற்றார் :
'நன்றே,கொண் டா!'எனவே,
நாணயத்தைப் பெற்றவரும்,

'என்றன்பின் வா!'எனவே
ஏவிமுன்னே தாம்நடந்தார்.
கன்றினைப்போல் அவர்பின்னே
களிப்பாக நான்நடந்தேன்.
அதிகாரி வீடடைந்து,
அன்னமிட்டே, ஆடைதந்தார் ;
பதிவாக அன்றுதொட்டுப்
பலதொழில்கள் பார்த்துவந்தேன் ;

கடைகளுக்குச் செல்லுவதும்,
காய்கறிகள் வாங்குவதும்,
உடைவெளுத்துப் போடுவதும்,
வீடடித்துக் கூட்டுவதும்,
விறகுடைத்துப் போடுவதும்,
மாடுகுளிப் பாட்டுவதும்,
வீட்டிலுள்ள பூஞ்செடிக்கு
மொண்டுதண்ணீர் ஊற்றுவதும்,

கட்டில்மெத்தை தான்விரித்தே
கால்பிடித்து நிற்பதுவும்,
சுட்டுகின்ற வேலையெல்லாம்
சுறுசுறுப்பாய்ச் செய்துவந்தேன்.
இப்படியாய்ப் பத்தாண்டும்
ஏற்றமுடன் சென்றனவே.

ஹிட்லர்எனும் ஓர்அரக்கன்
எங்கேயோ போர்தொடுக்க,

அபயம்எனக்கு அளித்திருந்த
அதிகாரி எனைவிளித்தே,
ஆயிரம்ரூ பாய்கொடுத்து,
ஐரோப்பா செல்லலுற்றார்.
பத்தாண்டு கட்குமுன்னர்
பத்துரூபாய் தான்மறுத்த
பித்தன்என்றன் கைகளிலே
இத்தனை ரூபாய்கிடைக்க,

சித்தமது தான்கலங்கிச்
சிந்தித்தேன் : முடிவாகச்
சத்திரத்துத் திண்ணையிலே
ஜவுளிக்கடை வைக்கலுற்றேன்.
வைத்தசில நாட்களிலே
விலைவாசி மேலெழவே,
மொத்தமதாய் அப்படியே
முழுவதையும் விற்றதினால்,

ஒன்றுக்குப் பத்தாக
உயர்ந்ததுஎன்றன் கைமுதலும்.
வென்றிமேல் வென்றிஎன
விரைவாகச் சிலநாளில்
சேனைபத்து ஆயிரம்பேர்
சிவகிரிமு காமிடவே,
'தேவையுள்ள யாவையுமே
தருவன்' என நான்செலவும்,

அதிகாரி ஆள்எனவே
ஆங்குள்ளோர் அகமகிழ்ந்து,
ஆட்சேபம் இல்லாமல்
அநுமதியும் தந்தார்கள்.
ஆடுகளும் மாடுகளும்
அன்னவர்கள் கேட்டபடி
பாடுபடும் ஆட்களுடன்
பண்டங்களும் நான்வழங்க,

என்னவிலை யானாலும்
சொன்னவிலை தந்தார்கள்,
அன்னவர்போல் கொடுப்பவர்கள்
அவனியினில் யாருமில்லை!
ஆண்(டு)இரண்டு செல்லுமுன்னர்,
ஐந்துலட்சம் பொருள்சேர,
மீண்(டு)இரண்டு ஆண்டுதனில்
மேலும்பத்து லட்சரூபாய்,

ஆற்றுவெள்ளம் வந்ததுபோல்,
அடைந்ததுஎன்றன் பெட்டியிலே.
ஆறடுக்கு அரண்மனையில்
ஏறிவந்தால் காண்பீர்கள் :
கட்டிலுண்டு, மெத்தையுண்டு,
கால்பிடிக்கத் தாதியுண்டு,
இட்டேவல் செய்வதற்கே
எண்ணற்ற பேர்களுண்டே!

மட்டில் மகிழ்ச்சியுடன்
மன்னுதி மன்னனைப்போல்,

எட்டுத் திசைகளிலும்
எல்லவரும் தான்மதிக்க,
ஏற்றமுடன் வாழுகின்றேன்,
என்றன்நிகர் யாருமின்றி !
மாற்றமில்லை என்உரைக்கே,
மறுவார்த்தை சொல்வாரில்லை !

தெருவிலே நான்நடந்தால்
சிவஞ்க எனைப்போற்றிச்
சேவித்தே நிற்கின்ருர்
சிவகிரியில் வாழ்வோர்கள் !
முன்பே ஒருநாளில்
மோதிரத்தைத் தான்வாங்கி
அன்பே சிறிதுமின்றி
அலட்டியஅப் பொட்டிமகன்,

அன்பே கசிந்துருக,
அபிநயங்கள் வழிந்தொழுக,
என்றன் அரண்மனைக்கே
ஏகிஒரு நாள்இரவு,
'உங்கள் மகிமைதனை
உணராமல் நான்இழைத்த
பங்கங் களைமறந்து,
பாலித்தல் வேண்டுமய்யா !

'உங்கள் திருவாலே
ஊரெல்லாம் சிறந்ததுவே !
மங்களம் மிகுந்திடவே
மனமகிழத் தாங்களுமே

எங்கள் குலமகளை
        ஏற்றருள வேணுமய்யா!
செக்கச் சிவந்திருப்பாள்,
        செல்வியென்றன் ராசாத்தி!

'சொக்கிமயல் கொண்டிடுவாள்
        துரை உம்மைக் கண்டுவிட்டால்;
எக்காலும் தங்களுக்கே
        ஏற்றரதி யாயிருப்பாள்!'
என்று பலவாக
        இயம்பினான் வெட்கமின்றி.
'நன்று, கொண்டா!' எனவே
        நானும் பதிலுரைத்தேன்.

நல்லதோர் நாள்பார்த்து
        நடத்தினேன் திருமணத்தை!
சொல்லவே முடியாது
        சோடனையும் ஊர்வலமும்!
எட்டுநாள் கச்சேரி!
        எங்கிருந்தோ பலபேர்கள்,
பெட்டி படுக்கையுடன்
        பெட்புடனே வந்திருந்தார்!

சென்னைக் கவர்னருடன்
        சேனாதி வீரர்களும்
என்னுடைய கைகுலுக்கி
        ஏகினார் வாழ்த்திவிட்டே!
பட்டங்கள் பெற்றவரும்,
        பதவிகளில் மிக்கவரும்,

எட்டுநாள் தவருமல்
என்மனைக்கே வந்திருந்தார் !

சிவனோடு பார்வதியும்
சிவகிரிக்கே ஓடிவந்து
சிறப்பாகத் திருமணத்தை
நடத்திவைத்துச் சென்ருர்கள் !
தந்தபொற் காசுகளை
முந்தி முடிந்துகொண்டு,
வந்திருந்த பார்ப்பனரும்
வாழ்த்திவிட்டுச் சென்றனரே !

---

# 9

## இயம்பாரோ யாரேனும்?

மாலைப் பொழுதினிலே
வயலெலலாம் சுற்றிவிட்டுச்
சாலை அருகினிலே
சாருங்கால், அங்கொருவன்—
ஏழை-எனதுஎதிரே
ஏக்கமுடன் வந்துநின்றான்.
மேலைக் கதிரவனும்
வெட்கமுற்றுத் தான்மறைய,
வந்தவனும் கைகூப்பி
வணங்கிநின்றான் என்முன்னே.
சொந்த உடன்பிறந்த
சோதரன்போல் நோக்கலுற்றான்,
எங்கேயோ கண்டதுபோல்
என்மனத்தே இருந்தாலும்,
இன்னான் எனஅறியக்
கூடாமலேதிகைத்தேன்.

'என்னை அறியீரோ?'
என்றவனும் கேட்கலுற்ருன்.
பின்னும் அவனையே
பேசாமல் பார்த்திருந்தேன்.

'தமயந்தி வேடம்நான்
தாங்கியதைக் கண்(டு)உவந்தே
தங்கப் பதக்கமும்
தந்தீரே தாம்ஒருநாள்!
"பங்கமிலா இத்தொழிலும்
பாரதனை உய்விக்கும்!
பொங்கிடுமால் மங்களமே
எங்கும்!" எனப்பகர்ந்தீர்!
காணீரோ என்நிலைமை—
கலைக்குப் பலியானேன்!
கேளீரோ என்கதையைக்
கேட்கவுந்தான் நேரமுண்டோ?
பள்ளிக்குச் செல்லும்
பாலப் பருவமுதல்,
துள்ளி விளையாடும்
பிள்ளைப் பிராயமுதல்,
நாடகக் கம்பெனியில்
நான்சேர்ந்து உழைக்கலுற்றேன்;
வேடம் பலதாங்கி
விருப்பாய் நடித்திருந்தேன்.

'அரசர்முதல் ஆண்டிவரை
அனைவருமே கண்டதுண்டு;

பரவசமாய் என்னைப்பலர்
பாராட்டிப் புகழ்ந்ததுண்டு;
“குயில்போன்ற சாரீரம்,
குற்றமிலா நன்னடிப்பு,
மயில்போன்ற சிங்காரம்
மான்போல் விழிஇரண்டு,
அன்னத்தை ஒத்தநடை,
யாருமில்லை ஈடு!”என்றார்.
“சொன்னத் திருமேனி
சொக்குதையா!” என்று பலர்
சென்ற இடங்களெல்லாம்
சேர்ந்து புகழ்ந்ததுண்டு;
மன்றத்தே வீற்றிருக்கும்
மன்னவரும் வியந்ததுண்டு!
இரவைப் பகலாக்கிப்
பகலெல்லாம் கண்திறந்து,
தருகின்ற பாடமெலாம்
தலைகீழாய் உருப்போட்டு,

எங்குமே போகாமல்,
எவருடனும் சேராமல்,
தங்கமாய்ப் பெற்றெடுத்த
தாயுறவும் கொள்ளாமல்,
கம்பெனியின் வீடொன்றே
காணும் உலகம்என,
கஞ்சனாய் நடிக்கும்முத
லாளியே தெய்வம்என

மதித்து நான்வாழ்ந்து
மதிகெட்டுப் போனகதை
குறித்துப்பல கூத்தாடிக்
கோலம்இந்நாள் ஆனகதை
விரித்துநான் பேசுதற்கும்
கூசுதையா என்றன்உள்ளம்!
பெரிய பயல்கள்எனைப்
பிள்ளையென்று பாராமல்
பண்ணாத கூத்தெல்லாம்
பண்ணியே வைத்திருந்தார்;
எண்ணாத எண்ணமெலாம்
எண்ணி எனைவதைத்தார்!

'பொல்லாத நோயொன்று
பற்றிஎனைச் சீரழிக்க,
எல்லா வைத்தியரும்
எனை,"நடிக்காதே!"என்றார்.
ஆகா, முதலாளி
அதற்குமனம் இளகவில்லை!
"போகவிட மாட்டேன்!"என்றார்;
"ஏகும்உன் றன் வியாதி!"என்றார்;
"ஓம்காளி உனைக்காப்பாள்!
உற்றதுணை யாள்உனக்கு!
ஆம்என்று சொல்லிட்டா,
அன்புடனே நான்காப்பேன்!
சாகும்வரை நான்உனக்குச்
சதம்என்(று) எண்ணாய்!"எனவே,
சத்தியத்தி லேதோய்ந்த
உத்தமனைப் போலவேதான்

சொன்னார் முதலாளி ;
    சூதுகள்நான் ஒன்றறியேன் !
“ என்ன குரலோசை !
    எழில்மிகுந்த சாரீரம் !
உன்னத மானஓர்
    உயர்நடிகன் ஆகிடுவான் !
பொன்னைக் குவித்திடுவான்,
    புகழெங்கும் நாட்டிடுவான் !”
என்று பலபேர்கள்
    என்றன்முத லாளியிடம்
சென்று மொழிந்தார்கள்
    சினிமாவில் சேர்ப்பதற்கே ;
அரிய பொருள் கொணர்ந்தே
    ஆசையுடன் பேசிநின்றார்.
“ பிரிய முடியாது,
    பெற்றவன்நான் !” என்றுசொல்லி,
உரிமை முதலாளி
    ஓட்டிவிட்டார் யாவரையும்.
அருமைமிகும் அன்னைஎனை
    ஆசையுடன் தேடிவர,
“ எருமை நீஎங்குவந்தாய் ?”
    என்(று)ஏசி ஓட்டிவிட்டார் ;
பொறுமை யுடையாளும்
    போய்விட்டாள் பேசாமல்.

‘ இந்நாளில் அந்தோ,
    இனியகுரல் மாறியதால்,

"எந்நாளும் நான்பிரியேன்!"
என்றவரும் ஓட்டிவிட்டார்!
பிழைக்க வழியறியேன்!
பிறதொழிலும் செய்தறியேன்!
உழைக்க வழியறியேன்,
உடல்நலமும் குன்றிவிட்டேன்!
என்னநான் செய்வதெனை
எடுத்துரைக்க வேணுமையா!
நன்னய மாய்வாழ
நான்என்ன செய்வதய்யா?
கற்றதொழில் கலையதுவும்
கால்விலங்காய் நின்றதுவே!
இத்தரையில் நான் இனிமேல்
என்செய்வேன்!' என்றுசொன்னான்.
கண்கள் மிகக்குழிந்து
களையிழந்து, முகம்சோர்ந்து,
புண்பட்ட நெஞ்சமுடன்
புழுங்கினான் நடிகனுமே.

'என்ன கொடுத்தார்கள்
உன்றனுக்கு?' எனக்கேட்க,
'தந்ததொன்றும் இல்லை, ஐயா,
தரித்திரம் ஒன்றையல்லால்!
மாதம்ஒரு பத்துரூபாய்
வீதம்என்றன் சம்பளமாம்;
சாதம் கறிகுழம்பு
யாவும் இலவசமாம்;
கட்டிய ஆடைகட்கும்
கைச்செலவு செய்ததற்கும்

கணக்கைச் சரியாக்கிக்
காட்டிவிட்டார் என்றனுக்கே !
கூறுகின்ற நாடகம்இக்
கொடுமைக்கே பிறந்ததுவோ ?
சாரும் தொழில்பிறவும்
செய்தறியேன், என்செய்வேன் ?
நாடகத்தைக் காண
நாள்தோறும் ஓடுகின்றீர் !
நாங்கள் படும்அவஸ்தை
நீங்கள் தெரிவதில்லை !

கூடுகின்ற பணமனைத்தும்
கூட்டுகின்றார் முதலாளி ;
காடுவயல் தோப்புக்
கட்டிடங்கள் வாங்குகின்றார் ;
பத்திபத்தி யாய்த்தினமும்
பத்திரிகை விளம்பரங்கள்
உத்தியாய் வரைந்திடுவார்
உளவறியா ஆசிரியர் ;
முதலாளித் தெய்வத்தின்
வஞ்சனைகள் தானறியார் !
உதவார் நடிகருக்கு
உலுத்தர்என யார்அறிவார் ?
" தருமங்கள் செய்கின்றான்,
தானங்கள் வழங்குகின்றான் !
தருமன் இவன் போலே
தாரணியில் யார்கொடுப்பார் !
கலைக்கோவில் கட்டிவிட்டான்,
கலைஎல்லை கண்டுவிட்டான் !

கலையரசு!" என்றிடுவார்,
கண்டபடி புகழ்ந்திடுவார்.

'என்னே, என்னே, உலகம்!
எங்கள்நிலை யாரறிவார்?
சொன்னேன், என்வார்த்தைகளைச்
சூதாக நினைப்பீரோ?
கலைஞனைத் தான்வதைத்தால்
கலைக்கோயில் நிலைத்திடுமோ?
உழைப்பாளி வருந்துவனேல்
உருப்படுமோ எக்கலையும்?
முதலாளி சேகரித்த
முதல்தான் நிலைத்திடுமோ?
உதவாதே இப்பொருளும்,
உதவாது! உதவாது!
"சேரும் பணம்அனைத்தும்
சேர்த்திடுவேன் நடிகருக்கே!
யாரும் குறைகூற
ஏதுவில்லை என்னிடத்தில்!
பாரும் ஜகத்தீரே,
பக்தியுடன் என்பாட்டை!
பாரும் உயர்ந்திடவே,
பரமனும் மகிழ்ந்திடவே,

"தெய்வத்தை யேபோற்றித்
தேசத்தை முன்னிறுத்தி,
சமுதாயத் தொண்டும்,
சார்ந்த கலைப்பெருக்கும்

தானேயாம் என்நோக்கம்!
தவறில்லை, இல்லை!"எனத்
தேனேபோல் முன்மொழிந்த
முதலாளி சொற்களையே
நம்பினோம் நாள்தோறும்
நானும் பிறருமெல்லாம்.
"எம்பிரான் இவர்!" என்றே
ஏத்தியேபோற்றி நின்றோம்.
மோட்டாரில் பறக்கின்றார்,
மூவடுக்கில் வாழுகின்றார்.
பாட்டாளி நடிகரெல்லாம்
பரவெளியில் வாடுகின்றார்!
சாற்றைப் பிழிந்தபின்னர்
சக்கைதனை எறிவதுபோல்,
சாரீரம் போனபின்னர்,
சந்திதனில் விட்டுவிட்டார்!

ஈனநிலை நாங்கள்எய்த,
எக்காலும்அவர் கொழுக்க,
காணுங்களை ஈதானால்,
கயவரோ உலகோரெல்லாம்!
ஆனமுதல் செல்வமெல்லாம்
யாருழைப்பால் வந்ததுவோ?
தீனர்குரல் கேளீரோ?
திரைதாழ்ந்து வீழ்ந்ததுவோ?"
என்றானே அவ்விளைஞன்:
என்னபதில் சொல்வதென
என்றனுக்குத் தோன்றவில்லை,
இயம்பாரோ யாரேனும்?

# 10

## உத்தம நாடு

உத்தம நாடுற்ற நண்பனும்—எங்கள்
ஊர்க்குத் திரும்பியே வந்ததும்,
அத்திரு நாட்டின் நலத்தையே—நான்
அறியவே சென்றனன் அவன்இல்லம்.
மெத்தப்பேர் வந்(து)அங் கிருந்தனர்—அந்த
மேதகு நாட்டிசை நண்பனும்
வித்தரித் துக்கொண்டி ருந்தனன்—நானும்
மேவி அவரோடு இருக்கவே.

*   *   *   *

சோம்பித் திரிபவர் இல்லைகாண்—அங்கு
சோற்றுக்குச் சட்டியைத் தாங்கியே
தேம்பித் திரிபவர் இல்லைகாண்—சில
தெய்வத் திருவருள் வேண்டியே!
ஓம்பித் திரிபவர் தாம்உளர்—பலர்
ஒன்றுகத் தொழில்பல கண்டதால்
வீம்புக் குறும்புகள் பேசியே—வீணில்
வேற்றுமை ஆற்றுவார் இல்லைகாண்!

கூடித் தொழில்புரி வார்களே—அன்றிக்
குற்றமாம் ஏவல்கொள் ளார்களே !
நாடித் தொழில்புரி வார்களே—சுய
நலத்தைக் கருத்தில்கொள் ளாமலே
ஆடிக் களிப்பதைக் கண்டிட்டால்—அங்கு
ஆண்டவன் நர்த்தனம் செய்குவான் !
பாடிக் களிப்பதைக் கண்டிட்டால்—பின்னர்
பாதகம் மீறுமோ பாரினில் ?

ஆணுடன் பெண்களும் ஒன்றியே—அங்கே
ஆட்சிகள் செய்கிறார் நன்றென ;
பேணும் பலதொழில் கண்டிடில்—பாரில்
பேசவும் பஞ்சம்இ ராதேகாண் !
காணும் திருவினைக் கண்டபின்—கெட்ட
கயவரும் உயர்வுறு வார்கள்காண் !
தோணும் எழிலினைப் பார்த்தவர்—பின்னர்
சொல்வாரோ மக்களைத் தூஷணை ?

"பஞ்சமா பாதகம் செய்கிலீர் !"—எனப்
பறைகொட்டும் பண்டிதர் இல்லையே !
பஞ்சாங்கப் பார்ப்பாரும் இல்லையே !—பாழும்
பலசாதிப் பிரிவினை இல்லையே !
நெஞ்சைத் துளைத்துமே நோக்கினும்—அதில்
நேசமும் ஊக்கமும் அன்றியே,
வஞ்சக் களவொடு பொய்மையும்—அதில்
கொஞ்சமும் காண இராதுகாண் !

ஆளுக் கொருவீடு கட்டியே—அதில்
ஆதர வோ(டு)இருப் பார்களே !

ஆளுக்கெலாம் சோறு உண்டுகாண் !—நல்ல
ஆடையும் அணிகளும் பூண்டுமே,
நாளுக்கு நாள்வளர்ந் தோங்கியே—அவர்
நன்மையி லேதிகழ்ந் தோங்குவார் !
நாளைக்கும் அஞ்சாது வீரமாய்—அவர்
நாடாளும் காட்சியோர் மாட்சியே !

கட்டாயப் படிப்பங்கே உண்டுகாண்,—நூல்கள்
கல்லாதார் யாரும்அங் கில்லையே !
கட்டாயத் தொழிலும்அங்(கு) உண்டுகாண்—உடல்
கட்டாக உள்ளவர் யார்க்குமே !
செட்டாகத் தொழில்பல செய்வதால்—அதில்
தேவையாம் நேரமும் சொற்பமாம் !
இட்டமாம் படியெல்லாம் அன்னவர்—மனம்
இன்புறக் காலத்தைப் போக்குவர்.

சங்கம சொத்துக்கள் அன்றியே—அங்கு
சகலமும் ஊரின் பொதுவெனச்
சங்கங்கள் பற்பல கண்டுமே—அவை
தகுதியாய்த் தேர்ந்திடுந் தோழரால்
அங்கங்க ளாக வகுத்துமே—அவர்
ஆட்சி புரிகின்றார் அன்பதாய்.
பங்கமே இல்லாத சட்டங்கள்—பல
பார்த்து நடத்துறார் பாங்கதாய்.

எல்லோர்க்கு மேஒன்று போலவே—அங்கு
எடுத்துக் கொடுக்கின்றார் சம்பளம் ;
வல்லோர்க ளாகஉள் ளோர்க்கெலாம்—வெற்றி
வாகையும் சூட்டியே போற்றுவார்.

எல்லோர்க்கும் என்னென்ன தேவையோ—அவை
எப்போதும் மலிவாகக் கிட்டுமே.
இல்லாதார் உள்ளவர் என்றுமே—பழி
இல்லாமல் வாழ்கின்ருர் இன்பமாய் !'

## கேள்வியும் - பதிலும்

என்றுமே சொல்லிமு டித்தபின்—நண்பன்
எல்லோர் முகத்தையும் கண்டனன் ;
ஒன்றுமே எவரும்சொல் லாததால்—நான்
ஓர்கேள்வி கேட்க விழையவும்,

‘ ஒன்றென்ன, நூருகக் கேட்பீரே !—நான்
உத்தரம் சொல்லுவேன் !' என்றனன்.
நன்றென நான்கேட்ட கேள்வியும்—நண்பன்
நவின்றிட்ட பதிலையும் கேண்மினே !

### நிலம்

[வேறு சந்தம்]

‘ உழுது பயிர்செயும் நிலத்துக்குத் தா(ன்)அங்கே
உற்ருர் யாரென்று சொல் ?'—‘ ஒவ்வோர்
ஊரிலும் உள்ளவர் ஒன்ருகக் கூடியே
உழுது பயிர் செய்குவார்—அந்நிலம்
ஊருக்கெலாம் பொதுவாம்.'

### அதிகாரம்

‘இன்னவன் இன்னதைச் செய்யென ஏவிட
எவர்அதி காரம் கொள் வார் ?'—‘ அவர்
நன்னய மாகவே நாட்டிய சங்கத்தின்
நாயக ரே சொல்லு வார்,—அவர்

சொன்ன பிரகாரம் சூதின்றி யாவரும்
சூழ்ந்து வினை செய்கு வார்.'

### உலுத்தர்

உழைத்திட மறுத்திடும் உலுத்தனை அங்கவர்
எங்ஙனம் திருத்திடு வார் ?'—' அந்த
ஊரின் விசாரணைத் தலைவரின் முன்கொண்டு
உள்ளதைச் சொல்லிடு வார்—அவர்
உரைக்கும் மதிதனை மறுத்திடில் அப்புறம்,
ஓட்டுவார் சிறையி னுள்ளே.'

" பட்டினி யாகவே பாரில் மடிந்திட
இட்டம் எனக்கே !" என்றால் ?'—' அவன்
இட்டத்தின் படியவர் விட்டுவி டுவார்கள்
வீதி தனில் இறக்க !'

### பொருள்

அறுவடை யானபின் குவிந்திடும் பொருள்களை
யார்கொண்டு போவா ரோ ?'—' அந்தச்
சீர்ப்பதி தனிலுள்ள சங்கத்தார் அவற்றினைச்
சேமித்தே வைப்பார் கள்—பின்னர்,
சீராக யாவர்க்கும் தேவையாம் நிறைகண்டு
திருத்தமாய்க் கொடுப்பார் கள்.'

### உழைப்பு

உழைப்பவர் யாவர்க்கும் ஒன்றுபோல் சம்பளம்
அளிப்பார்கள் என்றீ ரே !—எனில்
உழைப்பாரோ எல்லாரும் ஒன்றுபோல் என்றுமே,
உரையீரே விரிவா க?'—' அங்கு

உழைப்பவர்க்(கு) அல்லாமல் பிழைப்பவர் எல்லோர்க்
உரிமையாம் சம்பள மே - உடல் [கும்
ஊனருக்கும்பிணியாளருக்கும்பிறர்யாவருக்கும்அங்கு
ஒன்றுபோல் சம்பள மே.

'பொருளையே பெரிதெனப் போற்றும் உலகினில்
பொருளுக் காகஉழைப் பார்—அங்கே
புகழையே பெரிதெனப் போற்றுவ தால்அவர்
புகழுக் காகஉழைப் பார்—இதில்
புதுமையும் ஒன்றில்லை, புன்மையும் தானில்லை,

'புரிந்ததோ உங்களுக் கே?
பணத்தையே பெரிதெனப் பாவிக்கும் உலகினில்
பணத்துக் காகஉழைப் பார்—மக்கள்
குணத்தையே பெரிதெனக் கோரிடும் உலகினில்
குணத்துக் காகஉழைப் பார்—இதில்
குற்றங்கள் ஒன்றில்லை, குதர்க்கங்கள் செய்வோர்க்கே
குற்றமாக விளங் கும்!'

## வாணிபம்

'வாணிபங் கள்அங்கே செய்பவர் யாரென
வழுத்திடு வாயே, நண்பா!'—'அங்கு
வர்த்தகர் என்றிடும் வஞ்சகர் தாமில்லை;
வாங்கல் கொடுக்கல் களும்—மக்கள்
வர்த்தக சங்கத்தின் மூலமே செய்குவார்
வாய்மைசேர் நீதமு டன்.'

## தனித் தொழில்

'தனித்தனி மனிதர்கள் தனித்தனி யாம்தொழில்
தழுவிடல் ஆகா தோ?' —'அங்கு

தனித்தனி மனிதர்கள் தனித்தனி யாகவே
தழைத்திடல் வேண்டுமென் றே—அவர்
தனத்திலும் மேலான உழைப்பினைத் தனமென்றே
தந்துமே வாழுகின்றார்—அங்கு
தழைத்திடுந் தொழிலெல்லாம் தனித்தனி மனிதனின்
தகவினுக்கு ஆதர வாம்—அவர்
உழைப்பதும், உண்பதும், உடுப்பதும், களிப்பதாம்
உல்லாச மாம்முறை யில்—ஊரின்
தனத்தையே முதலெனக் குவித்துமே வாழ்கிறார்
தாழ்(வு)உயர்(வு) ஏதும் இன்றி.'

## தொழிற்சாலைகள்

[வேறு சந்தம்]

'பற்பல தொழிற்சாலை பாங்குடன் நிறுவியே
பார்ப்பவர் யாரெனப் பகருவீர் !'—'ஆங்கே
உற்பத்தி செய்யவும் ஊராரின் தேவையைச்
சீராகத் தீர்த்தபின், சேமித்த பொருள்களை
நீராவிக் கப்பலில் நெடுந்தூரம் கொண்டுபோய்
நூறாயிரமாக விற்றபின் மற்றவர்
வேறாக ஏதேனும் வாங்கியே மீளவும்
பற்பல சங்கங்கள் பாங்குடன்அங்குண்டு.
பாதகம் சேராமல் போதகத் தோடு அவர்
நேராக வாழ்ந்திடும் நெறிஉயர் வாகுமே.

## கல்வியும் கலையும்

[வேறு சந்தம்]

'உழைப்பும் தொழிலும் உறுவிவ சாயமும்
தழைக்கும் விதத்தினைத் தயவுடன் செப்பினீர் ;

உண்டியும் உடையும் ஒழுங்குடன் இல்லமும்
கண்டவர் வாழ்ந்திடும் கருத்தினைப் புகன்றீர் ;
வஞ்சகம்இன்றியே வர்த்தகம் நடைபெறும்
விதத்தையும், ஆங்கே வளர்ந்திடும் செல்வம்
ஊரின் பொதுவாய் உற்றிடுந் திறத்தையும்,
உவந்தே மொழிந்த உமக்கே வந்தனம் !
கல்வியும், கவிதையும், கருத்தினுக்கு இசைந்த
கலைகளும், பிறவும் கமழ்ந்திடும் விதத்தினைத்
தகவாய்ப் பகர்ந்திடில் சாலவும் இனிதே !'

உழைப்பதும், உண்பதும், உறங்கியே, பின்னர்
விழிப்பதும் அன்றியே வாழ்வினில் விழுப்பாம்
அருங்கலை ஒன்றும் ஆங்கே வளர்ந்திடல்
அருமையாம் எனவே கருதினீர் போலும் !
அறைகுவேன் அதனையும், அன்பரே கேளீர் !
ஆதவன் காணு அதிசயம் கேளீர் !
பள்ளிப் பருவம் பயந்த பிள்ளைகள்
ஆணும் பெண்ணும் அடங்க யாவரும்
கல்விச் சாலையே கொள்வார் இல்லமாய் ;
கல்விசேர் அறிஞர் களிப்புடன் ஆங்கே
கல்வியும் புகட்டியே களிபல காட்டுவர் ;
குணமுடன் குளிப்பும், குற்றமில் உடுப்பும்,
உயரிய உணவும் உவப்புடன் தந்தே,
பயமதை விரட்டியே பட்சமாய்ப் பார்ப்பார் !
இவ்வா றாக, இனிய பத்தாண்டுகள்
எளிதே சென்றபின், விளித்தே அவர்களை,
ஒவ்வோர் மகனும் ஒவ்வோர் மகளும்
அவரவர்க்கு இசைந்த அருந்தொழில் பேண

அன்பாய்அவரை அமைப்பார் புவியில்.
உயர்தரக் கல்வியில் ஊக்கமுள் ளோர்களை
ஒன்றாய்க் கூட்டி ஒழுங்காய் ஓரைந்து
ஆண்டுகள் மேலும் அறிவைப் புகட்டுவர்;
பின்னவர் கோரும் பிரியமாம் தொழில்களில்
சென்றே உழைத்திடச் செலவும் கொடுப்பர்.
மேலும் சிலபேர் மேலெனக் கருதிடும்
காவியம், ஓவியம், களிப்புறு நாடகம்
ஆகிய கலைகளில் ஆர்வமுற் றிருந்தால்,
அன்புடன்அவரை அமைத்து அக்கலைகளில்
திகழ்ந்தே வாழச் செலவும்கொடுப்பர்.
எத்தொழி லாயினும், எவரே செய்யினும்,
அத்தகையோர்க்கெலாம் அளிப்பரே உதவி.
புத்தகத் தோடுநல் புதுப்புதுக் கருவியும்
சித்தமாய் அவர்க்கே தேடியே கொடுப்பர்.
எல்லா நாட்களும், எல்லா ஊரிலும்,
நாளு விதமாய் நல்லோர் களித்திட,
ஆடவ ரோடே மாதரும் கூடியே,
நாடகத் தோடே நடனமும் ஆடுவர்.
இசையறி யார்களே இல்லைஅவ் வூர்தனில்!
இனிதே, இனிதே, இனிதவர் வாழ்வே!
ஒவ்வோர் கலைக்கும் ஒவ்வோர் சங்கம்,
வெவ்வேறு பணிக்கும் வெவ்வேறு சங்கம்,
என்(று)இவ் வாறாய் இருந்திடும் சங்கமே
தேர்ந்தே யெடுக்கும் தோழரே ஆட்சி
உத்தம புரத்தினில் உறுதியாய்ச் செய்வர்;
தேசச் சபையெனச் சிறந்(து)அது விளங்குமே.'

## காதலும் மணமும்

நன்றே, நன்றே, நண்பரே நவின்றீர்!
ஆணுடன் பெண்ணும் அன்பா யுறவே
பேணும் பெட்பினைப் புகலுவீர், கேட்போம்!'
செப்பிய தொழில்களில் சேர்ந்தே இருவரும்
ஒப்பிலா வகையில் உழைத்துமே வருகிறார்.
கற்றிடும் பிள்ளைகள் கற்றவர் பலரால்
கல்விச் சாலையில் கவனிக்கப் படுதலால்,
பெற்றோர்க் கில்லை பேணரும் பொறுப்பே.
கைச்சிசு ஒன்றே தாயின் பாரமாம்,
அதனையும் குறைக்க அங்குள பற்பல
பாலரின் சங்கம் பரிபா லிக்குமே.
கருத்துக் கிசைந்த காதலர் இருவர்
ஒத்த மனத்துடன் ஒன்றாய்ச் சேர்ந்திடில்
ஊரார் அறிந்தே உயர்மணம் செய்வார்;
தாயும் தந்தையும் தடைசொல் லார்கள்;
யாவரே யாயினும் எதிர் நில்லார்கள்!
எவ்வகை யாலோ இருவரின் மனமும்
பிசகிடின் பிரிந்திடத் தடையும் இராதே.
இவ்வாறாக இயல்பாய் அவர்கள்
இல்லறம் பூண்டே எழிலுடன் வாழ்வில்
நல்லறம் பேணி நலமுடன் நாளும்,
நாட்டினில் நன்னெறி நாட்டு கின்றாரே.'

## கடன்

சம்பளம் பெற்றதும் சட்டெனத் தீர்ந்தால்,
மற்றொரு சம்பளம் வழங்கும் வரைக்கும்
அன்னவர் நிலைமை என்னதா னாகும்?'

'நன்றே கேட்டீர், நியாயமே ஐயம்!
ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு நபரும்
ஒவ்வொரு பொருட்கும் ஒவ்வொரு சீட்டாய்ப்
பெற்றுக் கொள்வதே பெற்றிடும் சம்பளம்.
அவ்வச் சீட்டை அவ்வப் பொருட்கே
கொடுத்தால் கிடைக்கும், கொடார்கள் பிறிதே!
இவ்வித மாக இருப்பதால் எவரும்
சட்டெனச் சீட்டைத் தீர்ப்பதே சிரமம்!
தேவைப் படாத சீட்டினைத் திரும்பவும்
தேச சபையிலே சேர்த்திடல் நியமம்.
ஒருவர் சீட்டை ஒருவர் பெறலும்,
ஒருவர் பொருளை ஒருவர் பெறலும்,
குற்றமாம் எனவே சட்டமும் உளதால்,
ஈவோ ரில்லை! இரப்போரு மில்லை!
விற்போ ரில்லை! வாங்குவோ ரில்லை!
தேவையாம் பொருளைத் தேச சபையிலே
வேண்டிக் கொண்டால், விதிபோல் பெறலாம்!
அனைவர் நலனையும் அன்புடன் காக்க
அண்மையில் சங்கம் அநேகம் உளவால்,
எவர்க்கும் துன்பம் என்றுமே நேரா!
இமைநொடிப் போதில் எதனையும் பெறலாம்!
இனிதே, இனிதே, இனிதவர் வாழ்வே!'

## ஒழுங்கு

[வேறு சந்தம்]

'சட்டத்தை மீறியே துட்டத் தனம்செய்வார்
சாரும் கதிஎது வோ?'— 'அங்கு
சட்டமும் ஒழுக்கமும் திட்டமாய்க் காத்திடச்

சபைகளும் மெத்தஉண் டே ! - அதில்
நுட்பமாய் உண்மையை நாடி அறிந்தபின்
நீதி வழங்கு வாரே - அங்கும்
சிறுமைப் படுத்தாமல் பெருமைக் குணம்பெறச்
சிறப்பாய் நடத்து வரே.'

### கொலை

செற்றத்தால் ஒருவன் தோழனைக் கொன்றிடில்
சிரச்சேதம் செய்கு வரோ ?'— ' அவண்
எக்குற்றம் செய்தாலும் பக்குவம் பெற்றிட
நற்சிறை சேர்த்திடு வார்.'

### வழக்கறிஞர்

சழக்குகள் அறுக்கவும் வழக்குகள் நடத்தவும்
தக்கவர் மெத்தஉண் டோ ?'— ' ஆம், அவர்
சல்லியும் கேளாமல் துல்லிய மாகவே
தொண்டுகள் ஆற்று வரே.'

### பிணிகள்

பிணிபல பற்றியே வருந்திடு வோர்களைப்
பேணுவார் யாரேசொல் வீர் ?'— ' அங்கு
சூல்கொளும் தாய்முதல் சுழலும் கிழம்வரை
சுற்றம்போல் காப்பா ரே ! - அவர்
சொற்பமாம் நோயினில் சோர்வுற நேர்ந்தாலும்
சூதின்றிக் காப்பா ரே !'

### தொழில்

சமத்துவத் தோடுநல் தோழமை பூண்டபின்
சிறுதொழில் யார் புரிவார் ?'—' நீர்

சீரற்ற ஓர்தொழில் யாதெனச் செப்புவீர்,
சீர்மிகு நண்பர்களே ! - அங்கு
எத்தொழி லாயினும் நற்றொழி லாம்என
ஏதமிலா(து) அறிவார் - மற்றும்
சுத்தமாய்ச் செய்திடும் அற்புத வழிகளில்
மெத்தவும் தேர்ச்சியுள்ளார் - அவர்
உறுதொழில் யாவுமே ஊர்நலமாம் எனும்
உண்மையில் ஊன்றியுள்ளார் - அவர்
ஊர்மலம் எடுப்பதும், ஊரர்ண்மை செய்வதும்
ஒன்றெனக் கருதிடுவார் ! - அல்லால்,
ஒருதொழில் உயர்வென்றும், பிறதொழில்
இழிவென்றும்
உள்ளத்தில் கருதாரே !'

## மதுபானம்

'மதியினைக் கெடுத்திடும் மதுபானக் கடைகளும்
மகிபனே, அங்கே உண்டோ ?'— 'அங்கு
மகிழ்வினுக் குறுதியாம் மதுபான வகைகளும்
மற்றவை போலவுண்டே - எனில்
மதியினைக் கெடுத்திடும் மாபொருள் ஆசைதான்
மதிருந்தினைப் போலுமில்லை ! - மற்றும்
மக்களைப் பிரித்திடும் மநுமுறை நீதியும்
மகிபரே, அங்கே இல்லை !'

## விபசாரம்

'பரத்தையர் எனும்பல பாவையர் இழிதொழில்
பகருவீர், அங்குளதோ ?'— 'அங்கு
பணத்தினைக் கருதிஅப் பாதகம் செய்பவர்
பார்க்கவும் கிட்டாரே !'

## தந்தையும் தனையரும்

‘ தந்தை இறந்தபின் தனையரும் அவர் பொருள்
தமதெனக் கொள்வாரோ ?’— ‘ அங்கு
தந்தைக்குப் பொருளில்லை, தனையர்க்கும்
பொருளில்லை,

தாரணிக்கே பொதுவாம் ! - அங்கே
சாகும் வரையிலே பேணும் பொறுப்பினைச்
சங்கமே கொண்டுளதால் - நாளை
நேரும் கதியினை நெஞ்சத்தில் கருதியே
நிலைதடு மாற்றமில்லை !’

## எத்தவம் ?

[வேறு சந்தம்]

நற்றவம் செய்தார் இத்தரை மீதினில்
நலந்தரு செல்வராய்த் திகழ்ந்திடு வார் !’எனக்
கற்றவர் என்போர் கழறிய மறைகளும்,
மற்றவை மெய்யென வழுத்திடும் பற்பல
அறநெறி நூல்களும் அழிந்ததே ஆங்கு !
எத்தவத் தாலே உத்தம நாட்டவர்
இத்தனை மேன்மையாய் எழுந்தனர், சொல்?’என,
உத்தம நண்பனும் உரைப்பான் இங்ஙனே :

[வேறு சந்தம்]

‘ மநுநெறியை எரித்தவர்
மனிதநெறி உணர்த்தினர்,
மடமைதனை எரித்தவர்
மதிதனையே வளர்த்தனர்,

ஆண்டவனை விடுத்தவர்
    அன்பினையே வழுத்தினர்,
அனைவரும் உழைத்திடஎன்(று)
    உயர்நெறியைப் புகுத்தினர்,
தனியுடைமை வெறுத்தவர்
    தரைநலனே உரைத்தனர்,
பொதுவுடைமை பிடித்தவர்
    புன்மைநெறி அகற்றினர்,
தனிமனிதன் நலன்போலத்
    தரைநலனும் என்றனர்,
புதியநெறி படைத்தவர்
    பொறுப்புடனே வைத்தனர்,
அன்புநெறி உயர்த்தியே
    அதர்மநெறி தாழ்த்தினர் !
அவனி இனி அவர்வழியே
    அடைந்திடிலோ, ஆண்டவன்
தருமநெறி போற்றிடும்
    தரைஅடைந்து வாழ்வனே !'



---

Printed at KABEER PRINTING WORKS, Triplicane, MS 524
for Mullai Pathippakam H. O. Pudukkottai
Najma Publications L. Dis 8754.

" நரை
கூடிக் கிழப்பருவ மெய்திக் கொடும்
கூற்றுக் கிரையெனப் பின் மாயும்
வேடிக்கை மனிதர்''

ஐந்து கணவன்மார் இருந்தும், ஆசையின் கறை மறையாத பாஞ்சாலி, பெண்ணாகி வந்த மாயப் பிசாசைக் கண்டோடும் சிப்பாய், சூக்ஷ்ம ஆவி களோடு பேச வைக்கும் கங்காராம், கோயில் கொண்ட நெல்லையப்பன் முதல் சுத்தமல்லிப் பண்ணை வரையுள்ள புல்லுருவி வர்க்கத்தார் முதலிய பாத்திரங்கள் நம்மோடு நெருங்கி வந்து, "உம்மிடம் போயில்லை இருக்கா'வே'' என்று கேட்காத குறையாய் ஒட்டிப் பழகும் ஜீவ சிருஷ்டிகள், கசப்பும், கூர்மையும் பொருந் திய பச்சை உண்மைகள் — இவையே

ரகுநாதன் காட்டும்
'வேடிக்கை மனிதர்'.

"புதுமைப் பித்தனின்" முன்னுரை
கொண்ட உயர்ந்த பதிப்பு.


# முல்லைப் பதிப்பகம்

மயிலாப்பூர் — சென்னை-4

Wrapper Printed at P. A. S. Press, Post Box No. 349 Madras-2